# கவர்ன்மெண்ட் ஆப் இந்தியா ஆக்ட்,

# 1935

அல்லது

## புதிய இந்திய அரசியல் அமைப்பு.

முதல் பாகம்





ஆசிரியர்

கே. வி. ராமசுப்பிரமணிய அய்யர், பி.ஏ. பி.எல்.,

வக்கீல், மதுரை.

1936

 [0—12—0

# முகவுரை.

1917 ம் ஹு ஆகஸ்டு மீ 20 ம் தேதியில் பிரிட்டிஷ் கவர்ன் மெண்டார் இந்திய ஆட்சி சம்பந்தமாக ஒரு அறிக்கை பிரசுரித்தார் கள். அந்த அறிக்கையை அநேக பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் அநேக சமயங்களில் வியாக்கியானம் செய்ததிலிருந்து, குடியரசு நாடுகளின் நிலமையை (Dominion status) இந்தியாவும் நாளடைவில் அடைய வேண்டுமென்பதுதான் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாருடைய நோக் கம் என்று ஏற்படுகிறது. ஷை அறிக்கையை அனுசரித்து 1920 ம் வருஷத்தில் தாற்காலிகமாக மான்டேகு செம்ஸ்போர்ட் சீர்திருத் தங்கள் என்று சொல்லப்பட்ட இரட்டையாட்சி, ஒன்பது மாகாண ங்களில் ஸ்தாபிக்கப்பட்டுத்தற்காலம் நடந்து வருகிறது. ஷை சீர் திருத்தங்களினுல் இந்தியர்களுக்கு முன்னிலும் உயர்ந்த உத்தி யோகங்களும், சில சுதந்திரங்களும் மட்டுமே கிடைத்தனவே யொ ழிய பொறுப்பாட்சி ஸ்தாபிக்கப்படவில்லை. ஷை இரட்டையாட் சியை நீக்கிப் பொறுப்பாட்சியை ஸ்தாபிக்கவேண்டுமென்று இந்தியர் கள் வற்புறுத்திக்கொண்டிருந்தார்கள். இந்தியர்களுக்கு ராஜ்ய பரிபாலனத்தில் இன்னும் அதிகமான சுதந்திரங்களை எந்தமட்டில் கொடுக்கலாம் என்றும் இன்னும் மற்ற விஷயங்களைப்பற்றியும், விசா ரணைசெய்ய சைமன் கமிஷன் 1927 ம் வருஷக்கடைசியில் நியமிக் கப்பட்டு, சைமன் கமிஷன் அறிக்கை வெளியிடப்பட்டபின் பிரிட்டிஷ் பிரதிநிதிகளும் இந்திய பிரதிநிதிகளும் ஒரே வட்டமேஜையினடியில் சம அந்தஸ்துடன் கூடி இந்திய அரசியலில் என்ன என்ன சீர்திருத் தங்கள் செய்யவேண்டுமென்று தீர்மானிக்க மூன்று முறை வட்ட மேஜை மகாநாடு கூட்டப்பட்டது. ஷை வட்டமேஜை மகாநாட்டில் தீர்மானிக்கப்பட்ட விஷயங்களை ஆதாரமாக வைத்துக்கொண்டு, இந்திய அரசியல் சம்பந்தமாக பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் உத்தே சித்திருக்கும் சீர்திருத்தங்கள் 1933 ம் ஹு மார்ச்சுமாதத்தில் ஓர் வெள்ளை அறிக்கை மூலம் வெளியிடப்பட்டன. ஷை வெள்ளையறிக் கையிற்கண்ட விஷயங்களைச் சட்டரூபமாகப் பார்லிமெண்ட் சபை யில் நிறைவேற்றுவதற்காக பார்லிமெண்ட் சபையாரின் கூட்டுக்கமி

ட்டி ஒன்று ஏற்படுத்தப்பட்டு, அந்தக் கமிட்டியின் அறிக்கையிற் கண்ட சிபார்சுகளுக்கிணங்க ஷை வெள்ளையறிக்கைத்திட்டத்தை மாறுதல்செய்து, இந்தியா கவர்ன்மெண்ட் மசோதா 1934ம் வருஷக் கடைசியில் பார்லிமெண்ட் சபையில் பிரவேசனம்செய்யப்பட்டுச் சில திருத்தங்களுடன் பார்லிமெண்ட் சபையாரால் அங்கீகரிக்கப்பட்டு, சென்ற 2-8-35 தேதியில் மன்னர்பிரான் அவர்களின் சம்மதத்துடன் சட்டமாக வெளியாகியிருக்கிறது.

புதிய அரசியல் திட்டத்தை இந்தியர்கள் ஒருவரும், அவர்கள் எந்த ராஜீயக்கக்ஷியைச்சேர்ந்திருந்தாலும் சரி, முழுமனதுடன் ஒப்புக்கொள்ளத்தயாராகயில்லை. இந்தியர்கள் கேட்ட அளவு சீர்திருத்தங்கள் அளிக்கப்படவில்லையாயினும், அவைகளின் மூலம் இந்தியா அபிவிருத்தியடையலாம் என்று சிலர் அபிப்பிராயப் படுகிறார்கள். மற்றும் சிலர் ஷை சீர்திருத்தங்கள் மூலம் இந்தியாவுக்குக்கெடுதி ஏற்படுமே யொழிய யாதொருவித நன்மையும் ஏற்படக்கூடியதில்லை என்று கூறுகிறார்கள். சிலர் புதிய சட்டசபைகளையும், புதிய அரசியலையும் பூராவாக பஹிஷ்கரிக்கவேண்டுமென்றும், மற்றவர்கள் புதிய சீர்திருத்தங்கள் மூலம் ஏற்படக்கூடிய நன்மையை கிரகித்துக்கொண்டு, இந்தியர்களுக்குப் பூர்ண பொறுப்பாட்சி கொடுக்கவேண்டுமென்று வாதிக்கவேண்டுமென்றும், சொல்லுகிறார்கள். ஷை அபிப்பிராயங்களில் எதுசரி, எதுதப்பு என்ற விஷயத்தைப் பற்றி விவாதிக்கவேண்டியகாலம் கடந்துவிட்டது. நாம் சம்மதித்தாலும் சரி, சம்மதிக்காவிட்டாலும் சரி, புதிய சீர்திருத்தங்கள் கூடிய சீக்கிரம் அமுலுக்குக்கொண்டுவரப்படும். சட்டசபைகள், புதிதாக நிர்மாணிக்கப்படும். இந்த நிலமையில் புதிய அரசியல் திட்டத்தைச் சரிவர நடத்தவோ, அல்லது நடைபெறாமல் தடைசெய்யவோ, அந்த திட்டத்தின் பூரா விவரங்களையும் நன்றாகத் தெரிந்துகொள்ள வேண்டியது மிக்க அவசியம். பர்மா நீங்கலாக பிரிட்டிஷ் இந்தியாவில் மொத்தம் 25 கோடி ஜனங்களிருந்தபோதிலும், தற்கால மாகாண சட்டசபைகளுக்குப் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கும் உரிமை சுமார் 73 லக்ஷம் ஜனங்களுக்கு மட்டுமே இருக்கிறது. (70 லக்ஷம் புருஷர்கள், 3 லக்ஷம் ஸ்திரீகள்). நமது ராஜதானியில் மொத்தம் 4½

கோடி ஜனங்களில் சுமார் 15 லக்ஷம் ஜனங்களுக்குமட்டும் ஓட் கொடுக்கும் உரிமை தற்காலம் இருக்கிறது. ஆனால் புதிய அரசியல் திட்டத்தில் நமது ராஜதானியில் மட்டும், நமது மாகாண ஜனப் பிரதி நிதி சபைக்கு ஓட்கொடுக்கும் உரிமை சுமார் 70 லக்ஷம் ஜனங் களுக்குக்கொடுக்கப்படும். பிரிட்டிஷ் இந்தியா முழுவதற்கும் மொத்தம் சுமார் 350 லக்ஷம் ஜனங்களுக்கு (290 லக்ஷம் புருஷர்கள் 60 லக்ஷம் ஸ்திரீகள்) ஓட்டுரிமை கொடுக்கப்படும். மற்ற எந்த விஷயத்தைப்பற்றி அபிப்பிராயபேதம் இருந்தபோதிலும் ஜனங் களின் ஓட்டுரிமையை ஒன்றுக்கு ஐந்து வீதம் அதிகப்படுத்தியிருப் பது தேசநன்மையின் அபிவிருத்திக்கு ஆதாரமான அம்சம் என் பதைப்பற்றி யாதொரு அபிப்பிராயபேதமும் இருக்கமுடியாது. புதிய அரசியல் திட்டப்படி ஏற்படுத்தப்படும் சட்டசபைக்குச் சரியான பிரதிநிதிகளைப் பொறுக்கியெடுக்கவேண்டிய பொறுப்பு, நமது மாகாணம் சம்பந்தப்பட்டமட்டில்,கூடி 70 லக்ஷம் ஜனங்களைச் சேர்ந்ததாகையால், புதிய அரசியலில் சட்டசபைகளுக்கு என் னென்ன அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றனவென்றும், அந்த அதிகாரங்களை நமது தேசநன்மைக்கும் அபிவிருத்திக்கும் சாதகமாக எந்த மாதிரி செலுத்தவேண்டுமென்றும், பொதுவாக புதிய அரசியல் திட்டத்தின் மற்ற எல்லா விவரங்களையும் எல்லா ஜனங்களும் தெரிந்துகொள்ளவேண்டியது அத்தியாவசியம். இந்த உத்தேசத்துடன், புதிய சீர்திருத்தங்களின் குணகுணங்களைப்பற்றி விவாதாஸ்பதமான விமர்சனை யாதொன்றுமன்னியில், புதிய இந்தியா கவர்ன்மெண்ட் ஆக்டில் கண்டிருக்கும் விஷயங்கள் பூராவையும், ஆங்காங்கு கொஞ்சம் வியாக்கியானத்துடன் இச்சிறு புஸ்தகரூப மாக வெளியிடப்பட்டிருக்கிறது.

இச்சிறு புஸ்தகம் இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட் டிருக்கிறது. முதல் பாகத்தில் புதிய அரசியல் திட்டத்தின் விபரம் பூராவும் அடங்கியிருக்கிறது. இரண்டாவது பாகத்தில் சட்ட சபைகள், தேர்தல்கள் இவைகள் சம்பந்தமான பூரா விஷயங் களும், ஜனங்களின் ஸ்திதிகதி விவரத்தொகுதியும், ருசிகரமான சில புள்ளி விபரங்களும் அடங்கியிருக்கின்றன. தேர்தல் சம்பந்தமான

சில விபரங்கள் இன்னும் நிர்ணயிக்கப்படவில்லை யாதலால் முதல் பாகம் மட்டும் இப்பொழுதே வெளியிடப்பட்டிருக்கிறது. அவ்வி விபரங்கள் நிர்ணயிக்கப்பட்டவுடன் இரண்டாம்பாகம் வெளியிடப்படும்.

புதிய இந்தியா ஆக்டில் 321 செக்ஷன்களும், 10 அனுபந்தங்களும் இருக்கின்றன. இவைகளின் சாராம்சம் சுமார் 300 பக்கங்களில் என்னுடைய ஆங்கில புஸ்தகத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது. அதிற்கண்ட விஷயங்கள் பூராவையும் இச்சிறு புஸ்தகத்தில் 80 பக்கங்களுக்குள் அடக்கவேண்டிய உத்தேசத்துடன் விஷயங்கள் மிகவும் சுருக்கமாகக் கூறப்பட்டிருக்கிறபோதிலும், ஆக்டில் உள்ள விஷயங்கள் யாதொன்றையும் விட்டுவிடவில்லை.

இதில் இருக்கக்கூடிய பிழைகளைப்பொறுத்து என்னை ஆதரிக்குமாறு தமிழ்நாட்டு சகோதரர்களைக்கேட்டுக்கொள்ளுகிறேன்.

மதுரை. கே. வி. ராமசுப்பிரமணியம்.
5—2—36.



# பொருளடக்கம்.

## முதல் பாகம்.

# அத்தியாயம் 1.

## இந்தியாவில் பிரிட்டிஷ் ராஜ்ய ஸ்தாபனமும் கம்பெனியாரின் அரசாட்சி முறையும்.

## (East India Company)

---

1. கி. பி. பதினாறாவது நூற்றாண்டு முடிய இந்தியா தேசம் இந்து அரசர்களுடைய ஆளுகையிலும் மகம்மதிய அரசர்களுடைய ஆளுகையிலும் இருந்து வந்தது என்றும், பதினேழாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் முதல்முதலாக இங்கிலீஷ்காரர்கள் இந்தியாவுக்கு வியாபாரத்துக்காக வந்தார்கள் என்றும் நாளடைவில் அவர்கள் தங்கள் வியாபாரத்தை விருத்தி செய்ததுமல்லாமல் இந்தியா பூராவையும் தங்கள் ஆளுகைக்குள் கொண்டுவந்து ராஜ்யாதிகாரம் செய்துவருகிறார்கள் என்றும் நம் வாசகர்களுக்குச் சரித்திர மூலமாக நன்கு விளங்கும். இவ்வத்தியாயத்தில் ஷை கம்பெனியாரின் நிர்வாக முறையைப் பற்றியும் சட்டதிட்டங்கள் ஏற்படுத்தும் அதிகாரத்தைப்பற்றியும் மட்டும் சுருக்கமாக நாம் ஆராய்வோம்.

2. முதல்முதல் கி. பி. 1600-ம் வருஷத்தில் கம்பெனியாருக்கு இந்தியாவிலும் அதைச்சுற்றிலுமுள்ள தீவுகளிலும் 15௵த்துக்கு வியாபாரம் செய்ய இங்கிலாந்துதேசத்து ராணியாராகிய எலிஸபெத் அம்மாள் அவர்களால் அனுமதி சாசனம் (charter) கொடுக்கப்பட்டது. ஷை கெடு முடிந்ததும், மறுபடியும் 15௵ங்களுக்கு வியாபாரம் செய்ய அனுமதி கொடுக்கப்பட்டு, பிறகு ஒவ்வொரு கெடு முடியவும் மறுபடியும் 15 அல்லது 20 ௵-ங்களுக்கு அனுமதி கொடுக்கப்பட்டே வந்தது. ஷை கம்பெனியின் வியாபாரிகள் அனைவரும் அந்தக்கம்பெனியின் மெம்பர்கள். ஷை கம்பெனியை நடத்த ஒரு நிர்வாக சபை ஏற்படுத்தப்பட்டு அதற்கு தலைமை வஹிக்க ஒரு கவர்னரும், ஒரு டெப்டிகவர்னரும், 24 மெம்பர்கள் அடங்கிய ஒரு கமிட்டியும் ஏற்படுத்தப்பட்டது. ஷை கமிட்டிக்கு

நாளடைவில் (Court of Directors) கோர்ட் அப் டைரெக்டர்ஸ் என்ற பெயரும், ஷெ கம்பெனியின் எல்லா மெம்பர்களும் அடங்கிய பொது சபைக்கு (Court of Proprietors) கோர்ட் அப் புரோப்ரைட்டர்ஸ் என்ற பெயரும் ஏற்பட்டன. ஆரம்பத்தில் கம்பெனி இந்தியாவில் பல இடங்களில் வியாபாரத்துக்காக டிப்போக்கள் ஏற்படுத்தினார்கள். அதற்கு வேண்டிய பூமியையும் மனையையும் ஆங்காங்கு அரசாண்டுவந்த இந்திய அல்லது மகம்மதிய அரசர்களிடமிருந்து கிரயத்துக்கோ அல்லது நன்கொடையாகவோ வாங்கி, அங்கே கட்டடங்கள் முதலியவைகள் கட்டி, சிப்பந்திகள் ஏற்படுத்தி வியாபாரம் செய்துவந்தனர். பின்னால், தங்கள் கட்டடங்களையும், வியாபாரச்சரக்குகளையும் பாதுகாத்துக்கொள்வதற்காகத் தங்கள் வியாபாரஸ்தலத்தைச்சுற்றி கோட்டைகள்கட்டிக்கொள்ளவேண்டிய அவசியமும் ஏற்பட்டது. இதற்காக 1661-ம் ஹுஶத்தில் இங்கிலாந்து அரசரால் கொடுக்கப்பட்ட அனுமதிப்பத்திரத்தில் கோட்டை கட்டிக் கொள்ளவும், கம்பெனியின் காரியாதிகளைப்பார்த்துவர அதிகாரிகளும் சிப்பந்திகளும் நியமிக்கவும் அவர்கள் எல்லாருக்கும் தலைமையாக ஒரு கவர்னர் நியமிக்கவும் அதிகாரம் கொடுக்கப்பட்டது. கம்பெனியார் அநேகம் இடங்களில் டிப்போக்கள் ஏற்படுத்தியிருந்த போதிலும் சென்னை, பம்பாய், கல்கத்தா இந்த மூன்று இடங்களில் ஏற்படுத்தப்பட்ட டிப்போக்கள் பிரபலமடைந்து தலைமை டிப்போக்களாக ஆகி, மற்ற ஊர்களில் இருக்கும் டிப்போக்கள் இவைகளின் தலைமைக்கு உள்பட்டு நடத்தப்பட்டு வந்தன. நாளடைவில் கம்பெனியாருடைய சுவாதீனத்துக்குள்பட்ட இடங்கள் அதிகரித்துவிட்டதனால் அவைகள் சென்னை பம்பாய் வங்காளம் என்ற மூன்று மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு மாகாணத்திலும் கம்பெனியாரால் நியமிக்கப்பட்ட ஒருகவர்னரும், மேலதிகாரிகள் அடங்கிய ஒரு சபையும் நிர்வாகம் வகித்துவந்தார்கள். கம்பெனியின் காரியாதிகளை நிர்வகிக்கவும், கம்பெனி அதிகாரிகள் சிப்பந்திகள் முதலியவர்கள் அனுசரித்துக் கீழ்படிந்து நடக்கவும் வேண்டிய சட்டதிட்டங்களும் கம்பெனியார் ஏற்படுத்தினார்கள். அவ்விதம் சட்டதிட்டங்கள் ஏற்படுத்த மேலே கண்ட 1661-ம் ஹுஶத்து அனுமதிப் பத்திரத்தில் அனுமதி ஏற்கனவே கொடுக்கப்பட்டிருந்தது.

3. மொகலாய ராஜ்யம் பிரபலமாகயிருந்தவரையில் கம்பெனியாருக்குத்தங்கள் சொந்தத்தில் சிப்பாய்கள் சேகரிக்கவோ அல்லது பிரத்தியேகமான சேனை ஒன்று ஏற்படுத்திக்கொள்ளவோ அவசியமில்லாதிருந்தது. ஆனால் மொகலாய ராஜ்யம் க்ஷீணதசையடைய ஆரம்பித்தது முதல், அதாவது மொகலாய சக்கிரவர்த்தி அவுரங்கசீபு இறப்பதற்குக்கொஞ்சகாலத்திற்குமுன் முதல்கொண்டு தேசத்தில் அதிக சண்டை சச்சரவுகள் ஏற்பட்டு, ஆங்காங்கு சிற்றரசர்கள் மொகலாய ராஜ்யத்தின் பாகங்களைத்தங்கள் கைவசப்படுத்திக்கொண்டு, ஒருவர் மற்றொருவர் ராஜ்யத்தை அபகரிக்க எண்ணிப் போர் புரியத்துடங்கியதாலும், எங்கும் ஒரேகலவரமாக இருந்ததாலும், கம்பெனியார் தங்கள் டிப்போக்களையும் அவைகளைச் சுற்றிலுமுள்ள தங்கள் இடங்களையும் பந்தோபஸ்து செய்துகொள்வதற்காக பிரத்தியேகமாக ஒரு சேனை ஏற்படுத்திக்கொண்டார்கள். ஷை சேனையின் உதவியைக்கொண்டும், இந்திய தேசத்திய மன்னர்களுக்குள் சதா இருந்துகொண்டிருந்த பரஸ்பர விரோதத்தையும் மாத்சரியத்தையும் ஆஸ்பதமாக வைத்துக்கொண்டும், வியாபாரத்துக்காக இந்தியாவுக்கு வந்த வர்த்தகக்கம்பெனியார் இந்தியாதேசம் முழுவதையும் தங்கள் ஆளுகைக்கு உள்படுத்திய விஷயம் சரித்திரப் பிரசித்தம்.

கம்பெனியார் ஆதியில் இந்தியாவுக்கு வந்தபொழுது இங்கிலாந்து தேசத்து அரசரிடம் அனுமதிப்பத்திரம் பெற்றுவந்தார்கள் என்று ஏற்கனவே தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அந்தக்காலத்தில் இங்கிலாந்து தேசத்திய பார்லிமெண்டரி சபையார் ஷை கம்பெனியாரைத்தங்கள் ஆளுகைக்குட்படுத்தப் பிரயத்தனப்படவில்லை. இதற்கு இரண்டு காரணம் கூறலாம். முதலாவது அந்தக்காலத்தில் பார்லிமெண்டு சபைக்கே அவ்வளவு பிராதான்யம் ஏற்படவில்லை. கி. பி. 1688-ம் வருஷம் வரை இங்கிலாந்து தேசத்து அரசர்கள் கிட்டத்தட்ட சுயேச்சாதிகாரிகளாக இருந்துவந்தார்கள். பார்லிமெண்டுடன் எல்லா விஷயங்களைப்பற்றி மந்திராலோசனை செய்தபோதிலும், தங்கள் இஷ்டப்படியே நடந்துவந்தார்கள். பதினெட்டாம் நூற்றாண்டு ஆரம்பத்திலிருந்துதான் பார்லிமெண்டின் அதி

காரம் அதிகரித்தது. இரண்டாவது காரணம் என்னவென்றால் கம்பெனியார் ஆரம்பத்தில் தங்கள் வர்த்தகத்தில்மட்டும் கவனம் செலுத்திவந்தார்களே யொழிய ராஜ்யம் சேகரித்து ஆளவேண்டு மென்ற எண்ணம் இல்லை. ஆனால் சிறுகச்சிறுக கம்பெனியாரின் பூஸ்திதி அதிகரிக்கவே பார்லிமெண்டும் தன் அதிகாரத்தைச் செலுத்த ஆரம்பித்தது. 1757-ம் வருஷத்திய பிளாஸி யுத்தத்திற் குப்பிறகு வங்காளத்தில் அதிக விஸ்தீரணமுள்ள நாடு கம்பெனிக்கு கிடைத்தது. 1765-ம் வருஷத்தில் வங்காளம் பீஹார், ஒரிஸா என்ற மூன்று பிரதேசங்கள் பூராவிலும் வரி வசூலிக்கும்பாத்தியதை யும் கம்பெனியார் அடைந்தார்கள். அதனால் 1767-ம் வருஷத்தில் பார்லிமெண்டார் கம்பெனியாரின் நிர்வாகம் சம்பந்தமாக சில ஆக்டு கள் ஏற்படுத்தினார்கள். 1773-ம் வருஷத்தில் ரெகுலேடிங் ஆக்ட் (Regulating Act) மூலமாகத்தான்கம்பெனியாரின் இந்திய ஆளுகை சம்பந்தமாகப் பார்லிமெண்டுசபையார் முதல்முதலில் பொறுப்பு எடுத்துக்கொண்டார்கள்.

4. கம்பெனியாரின் ராஜ்யம் மூன்று ராஜதானிகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொன்றுக்கும் ஒரு கவர்னரும் ஒரு ஆலோசனை சபையும் (Council) ஏற்படுத்தப்பட்டதென்று ஏற்கனவே தெரிவிக் கப்பட்டிருக்கிறது. 1772-ம் வருஷம் வரை ஷெ மூன்று ராஜதானி களும் சமத்வ அதிகாரத்துடன் ஒன்று மற்றொன்றுக்குக் கீழ்படியா மல் இருந்துவந்தன. இங்கிலாந்தில் இருக்கும் கம்பெனி மெம்பர் களுக்கும் கம்பெனி டைரெக்டர்களுக்கும் மட்டும் அவர்கள் வகை சொல்லவேண்டிய பொறுப்பாளிகள். ஒவ்வொரு கவர்னரும் தம் மந்திராலோசனை சபையில் தம் ராஜதானியின் காரியாதிகளை நடத்திவந்தார். ஆனால் 1772-ம் வருஷத்துக்குப்பிறகு ரெகு லேடிங் ஆக்ட் மூலம் வங்காள கவர்னருக்கு வங்காள கவர்னர் ஜெனரல் என்று பெயர் வைக்கப்பட்டு அவர் மதராஸ், பம்பாய் கவர் னர்களின் மேலதிகாரியாக நியமிக்கப்பட்டார். வங்காள ராஜதானி யின் நிர்வாகத்தை வகிக்க கவர்னர் ஜெனரலுக்கு 4 மெம்பர்கள் கொண்ட ஒரு நிர்வாக சபை ஏற்படுத்தி, கவர்னர் ஜெனரல் தன் நிர்வாக சபையில் வங்காள ராஜதானியின் நிர்வாகத்துக்குவேண்டிய

சட்ட திட்டங்களை ஏற்படுத்த அதிகாரமும் கொடுக்கப்பட்டது. 1786-ம் வருஷத்தில் சென்னைக்கும் பம்பாய்க்கும் வங்காளத்தைப் போலவே 4 மெம்பர்கள்கொண்ட நிர்வாகசபை ஏற்படுத்தப்பட்டது. சில வருஷங்களுக்குப்பின் ஷ்டி ராஜதானி கவர்னர்களுக்கும் தங்கள் நிர்வாக சபையில் தங்கள் ராஜதானிக்குச் சட்ட திட்டங்கள் ஏற்படுத்த அதிகாரம் கொடுக்கப்பட்டது.

1793-ம் வருஷத்தில் நிர்வாக சபைகளின் மெம்பர்கள் நான்கிலிருந்து மூன்றாகக் குறைக்கப்பட்டு இந்திய ராணுவத்தலைவர் கவர்னர்ஜெனரலின் நிர்வாக சபையின் அசாதாரண மெம்பராக நியமிக்கப்பட்டார். 1813-ம் வருஷத்தில் வரி வசூலிக்கும் அதிகாரம் ஷ்டி கவர்னர் சபைகளுக்குக் கொடுக்கப்பட்டது.

5. சிறுகச்சிறுக கம்பெனியின் டைரக்டர்களின் அதிகாரம் க்ஷீணித்துப் பார்லிமெண்டின் அதிகாரம் ஓங்க ஆரம்பித்தது. டைரக்டர்களின் சபையின் நடவடிக்கைகளை மேல்பார்வை பார்க்கவும், கண்டிக்கவும், இங்கிலாந்து மன்னர்பிரானுடைய மந்திராலோசனை சபை (Privy Council)யின் 5 மெம்பர்களை(Board of Control) போர்ட் ஆப் கன்ட்ரோல் என்ற பெயருடன் ஒரு கமிட்டியாக 1784-ம் வருஷத்து ஆக்ட்மூலம் ஏற்படுத்தி, அந்தக்கமிட்டிக்கு 1833-ம் வருஷத்தில் பூர்ண அதிகாரம் கொடுக்கப்பட்டது. அதே வருஷத்தில் வங்காளம், சென்னை, பம்பாய் இந்த மூன்று ராஜதானிகளையும் ஒரே ஆதிபத்தியத்தில் கொண்டுவருவதற்காக பம்பாய் சென்னை நிர்வாக சபைகளுக்கு 1786-ம் வருஷத்தில் சட்ட திட்டங்கள் ஏற்படுத்தும்படிக் கொடுத்திருந்த அதிகாரத்தை ரத்துச்செய்து, வங்காள நிர்வாக சபைக்குப் பூர்ணாதிகாரம் கொடுத்து வங்காள கவர்னர் ஜெனரல் இந்தியா கவர்னர் ஜெனரலாக நியமிக்கப்பட்டார். ஷ்டி சட்டதிட்டங்கள் சம்பந்தமான விஷயங்களைப் பிரத்தியேகமாக கவனிப்பதற்காக கவர்னர் ஜெனரலுடைய நிர்வாக சபைக்கு 4-வது மெம்பர் ஒருவர் நியமிக்கப்பட்டார். 1836-ம் வருஷத்தில் வங்காள ராஜதானியில் ஒரு பாகத்தைப்பிரித்துத் தனி ராஜதானியாக்கி (தற்கால ஐக்கிய மாகாணம்) அதற்கு ஒரு லெப்டினென்டு கவர்னர் நியமிக்கப்பட்டார். கம்பெனியாரின் ராஜ்யம்

முழுவதுக்கும் சட்டதிட்டங்கள் ஏற்படுத்தும் அதிகாரம் கவர்னர் ஜெனரலின் நிர்வாக சபைக்குக் கொடுக்கப்பட்டிருந்ததனால், மற்ற மாகாணங்களின் கவர்ன்மெண்டாரின் அபிப்பிராயம் தெரியும் பொருட்டு, சட்டதிட்டங்கள் சம்பந்தமான விஷயங்களைமட்டும் பரிசீலனை செய்ய 4 மாகாணத்திலிருந்து 4 பிரதிநிதிகளும், வங்காளத்து ஹைகோர்ட்டு(Supreme Court)தலைமை ஜட்ஜும் ஒருஉதவி ஜட்ஜும் மெம்பர்களாக நியமிக்கப்பட்டார்கள்.

6. 1853-ம் வருஷத்திய ஆக்டுப்படி கவர்னர்ஜெனரலின் சட்ட சபையில் கவர்னர்ஜெனரல், ராணுவத்தலைவர், கவர்னர்ஜெனரலின் நிர்வாக சபையின் 4 மெம்பர்கள், வங்காளத்து சீப் ஜட்ஜும் ஒரு உதவி ஜட்ஜும், நான்கு மாகாணத்திலிருந்து நான்கு பிரதிநிதிகள் (அந்தந்த கவர்ன்மெண்டால் நியமுகம் செய்யப்பட்டவர்கள்) ஆக மொத்தம் பனிரெண்டு மெம்பர்கள் இருந்தார்கள். ஷை சட்ட சபை பகிரங்கமாகக்கூடியது. ஷை சபையின் நடவடிக்கைகளும பிரசுரிக்கப்பட்டன. 1854-ம் வருஷத்தில் வங்காளத்திற்குப் பிரத்தியேகமாக ஒரு லெப்டினென்டு கவர்னர் நியமிக்கப்பட்டார். அது முதல் கவர்னர் ஜெனராலுக்கு வங்காளத்திய கவர்னர் என்ற பொறுப்பு நீங்கி எல்லா மாகாணங்களுக்கும் மேலதிகாரியாகிய கவர்னர் ஜெனரல் என்ற பொறுப்பு மட்டும் இருந்துவருகிறது.

7. நாளடைவில் ராஜ்ய விஸ்தீர்ணம் அதிகரிக்க, ஆங்காங்கு தனி மாகாணங்கள் ஏற்படுத்தப்பட்டு அவைகளுக்கு தலைமை வகிக்க லெப்டினென்டு கவர்னர்களும், சீப் கமிஷனர்களும் நியமிக்கப்பட்டார்கள்.

# அத்தியாயம் 2.

## கி. பி. 1858-ம் வருஷம் முதல் 1919-ம் வருஷம் வரை இந்தியாவில் அரசியல் முறை.

8. சிப்பாய்க் கலகத்திற்குப் பிறகு 1858-ம் வருஷத்து ஆக்ட் மூலம் இந்தியாவை ஆளும் பொறுப்பைக் கம்பெனியாரிடமிருந்து விலக்கி நமது மாக்ஷிமை தங்கிய ராணியார் நேரில் ஒப்புக்கொண்டார். கம்பெனியின் டைரெக்டர்களின் சபையையும் போர்டு ஆப் கன்ட்ரோலையும் ரத்துச்செய்து சர்வாதிகாரமும் செக்ரடரி அப் ஸ்டேட்

என்ற அதிகாரிக்குக் கொடுக்கப்பட்டது. (இங்கிலாந்து அரசாட்சி முறை எப்படியென்றால் எல்லாக்காரியங்களும் நாமகார்த்தமாக நமது மன்னர் பிரான் பேரால் நடந்துவந்த போதிலும் ஒவ்வொரு காரியத்திற்கும் ஒவ்வொரு செக்ரடரி, பார்லிமெண்டு சபைக்கு ஜவாப்தாரி. இப்படி முக்கியமான செக்ரடரிகளில் ஒருவரான இந்தியா செக்ரடரி இந்தியா சம்பந்தமான விஷயங்கள் பூராவையும் பார்லிமெண்டின் அறுதிக்குள்பட்டு கவனித்துவருகிறார்). இந்தியா செக்ரடரிக்கு ஆலோசனை சொல்ல இந்தியா கவுன்ஸில் என்ற பெயருள்ளதும் 10-க்கு மேல் 14-க்குள் மெம்பர்கள் அடங்கியதுமான ஒரு ஆலோசனை சபையும் ஏற்படுத்தப்பட்டது.

9. 1861-ம் வருஷத்து இந்தியன் கவுன்ஸில்ஸ் ஆக்ட்பிரகாரம் கவர்னர் ஜெனரலின் நிர்வாகசபைக்கு ஐந்தாவது மெம்பர் ஒருவரும், அவருடைய சட்டசபைக்கு 6-க்குமேல் 12-க்குள்ளாக அதிகப்படியாக மெம்பர்களும் நியமிக்கப்பட்டார்கள். ஷை சட்டசபை மெம்பர்கள் கவர்னர் ஜெனரல் அவர்களால் இரண்டு வருஷம் மெம்பர் ஸ்தானம் வகிக்கும்படியாக நியமிக்கப்பட்டார்கள். அவர்களில் பாதிப் பேர்கள் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் அல்லாதவர்களாக இருக்கவேண்டும். ஷை சட்டசபைக்குச் சட்டவிஷயமான சங்கதிகளைப்பற்றி மட்டும் ஆலோசனை செய்ய அதிகாரம் உண்டேயொழிய கவர்ன்மெண்டாரின் நிர்வாகத்தைக்கண்டிக்கவோ அல்லது அவைகள் சம்பந்தமாகக் கேள்விகள் கேட்கவோ அதிகாரம் இல்லை. மற்ற ராஜதானிகளின் கவர்னர்களும் நிர்வாக சபைகளும் தங்கள் ராஜதானிக்குச் சட்ட திட்டங்கள் ஏற்படுத்தும் அதிகாரம் 1833-ம் வருஷத்தில் நீக்கப்பட்டது என்று ஏற்கனவே அறிந்திருக்கிறோம். 1861-ம் வருஷத்து ஆக்ட் மூலம் ஷை அதிகாரம் அவர்களுக்குத் திரும்பவும் கொடுக்கப்பட்டது. எல்லா ராஜதானிகளுக்கும் சட்ட திட்டங்கள் ஏற்படுத்த கவர்னர்ஜெனரலுக்கும் அவர் சட்ட சபைக்கும் ஏற்கனவே இருக்கும் அதிகாரத்தையும் ஊர்ஜிதப்படுத்தப்பட்டது. 6 மாசத்திற்கு ஊர்ஜிதத்தில் இருக்கக்கூடிய ஆர்டினன்ஸ் (ordinance) என்ற அவசரச்சட்டம் ஏற்படுத்தும் அதிகாரமும் கவர்னர் ஜெனரலுக்குக் கொடுக்கப்பட்டது. 1874-ம் வருஷத்தில்

கவர்னர்ஜெனரலுடைய நிர்வாக சபைக்கு ஆருவது மெம்பர் ஒருவர் நியமிக்கப்பட்டார்.

10. 1892-ம் வருஷத்து இந்தியன் கவுன்ஸில்ஸ் ஆக்ட் மூலம் அடியிற்கண்ட மாறுதல்கள் செய்யப்பட்டன:—

(a) சட்டசபை மெம்பர்களின் தொகை அதிகரிக்கப்பட்டது. கவர்னர்ஜெனரல் சபைக்கு 10-க்குக் குறையாமலும் 16-க்கு மேற்படாமலும், சென்னை, பம்பாய் சபைகளுக்கு 8-க்கு குறையாமலும் 20-க்கு மேற்படாமலும், வங்காளத்திற்கு 20-க்கு மேற்படாமலும், ஐக்கியமாகாணத்திற்கு 15-க்கு மேற்படாமலும் மெம்பர்கள் இருக்கவேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்டது.

(b) கவர்னர் ஜெனரல் அல்லது கவர்னர் ஏற்படுத்தும் நிபந்தனைகளுக்கு உட்பட்டு மெம்பர்கள் வரவு சிலவு திட்டத்தைப் பற்றிக் கேள்விகள் கேட்கவும் தங்கள் அபிப்பிராயத்தை வெளியிடவும் மெம்பர்கள் அனுமதி கொடுக்கப்பட்டார்கள். ஆனுல் தீர்மானங்கள் கொண்டுவரவாவது அல்லது வரவு சிலவு திட்டத்தைப்பற்றி சபைகளில் ஓட் செய்யவாவது அவர்களுக்கு அதிகாரமில்லை.

(c) ஷை மெம்பர்கள் ஜனங்களால் தேர்தல் செய்யப்பட்டவர்கள் அல்லாத போதிலும் சில பொது சபைகளால் சிபார்சு செய்யப்பட்டு கவர்னர் ஜெனரல் அவர்களால் நியமிக்கப்பட்டார்கள். இந்திய சட்ட சபைக்கு நியமிக்கப்பட்ட சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் அல்லாத 5 மெம்பர்களில் 4 பேர்கள் நான்கு மாகாண சட்ட சபைகளாலும், ஐந்தாவது நபர் கல்கத்தா வர்த்தக சங்கத்தாராலும் பெயர் குறிப்பிடப்பட்டு நியமிக்கப்பட்டவர்கள். மாகாண சட்டசபைகளுக்கு நியமிக்கப்பட்ட மெம்பர்கள் முனிசிபாலிடிகளாலும், டிஸ்டிரிக்ட் போர்டுகளாலும் சிபார்சு செய்யப்பட்ட மெம்பர்கள்.

11. 1909-ம் வருஷத்து இந்தியன் கவுன்ஸில்ஸ் ஆக்ட் மூலம் அடியிற்கண்ட மாறுதல்கள் செய்யப்பட்டன:—

(a) சென்னை, பம்பாய் நிர்வாக சபைகளுக்கு 4 மெம்பர்கள் நியமிக்கவும், லெப்டினென்ட் கவர்னர்கள் ஆளுகையில் இருக்கும்

மாகாணங்களுக்கு நிர்வாக சபை ஏற்படுத்தவும் அதிகாரம் கொடுக்கப்பட்டது.

(b) கவர்னர் ஜெனரலின் சட்ட சபைக்கு 60 மெம்பர்கள் வரையும், சென்னை, பம்பாய் சட்டசபைகளுக்கு 50 மெம்பர்கள் வரையும், மற்ற மாகாண சட்டசபைகளுக்கு 30 மெம்பர்கள் வரையும் மெம்பர்களை அதிகரிக்க அதிகாரம் கொடுக்கப்பட்டது.

(c) ஷை மெம்பர்களில் கவர்னர் ஜெனரல் சட்டசபையில் சர்க்கார் மெம்பர்கள் அதிகமாகவும், மாகாண சபைகளில் சர்க்கார் வேலையிலில்லாதவர்கள் அதிகமாகவும் இருக்கவேண்டும்.

(c) ஷை சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் அல்லாத மெம்பர்கள் பொதுஜன சபைகளால் அதாவது முனிசிபாலிடிகள், ஜில்லா போர்டுகள், வர்த்தக சங்கங்கள் முதலியவைகளால் தேர்ந்து எடுக்கப்படவேண்டும். கவர்னர் ஜெனரல் அல்லது கவர்னருடைய சம்மதம் அல்லது ஆமோதித்தல் அவசியமில்லை.

(d) சட்டசபைகளில் பொது விஷயங்களைப்பற்றிக் கேள்விகள் கேட்கவும், தீர்மானங்கள் கொண்டுவரவும், மெம்பர்களுக்கு அனுமதி கிடைத்தவுடன் வரவு சிலவு திட்டத்தை கவர்ன்மெண்டார் தீர்மானிப்பதற்குமுன் அது விஷயமாகத்தங்கள் அபிப்பிராயங்களை வெளியிடவும் அது சம்பந்தமாக ஒட் செய்யவும் மெம்பர்கள் பாத்தியம் அடைந்தார்கள்.

1907-ம் வருஷத்திலேயே சீமையிலிருக்கும் இந்தியா கவுன்ஸிலுக்கு இரண்டு இந்தியர்கள் மெம்பர்களாக நியமிக்கப்பட்டார்கள். 1909-ம் வருஷத்துக்குப்பிறகு கவர்னர் ஜெனரலின் நிர்வாக சபையிலும் ஒவ்வொரு மாகாண நிர்வாக சபையிலும் ஒரு இந்தியர் மெம்பராக நியமிக்கப்பட்டார்.

12. 1909-ம் வருஷத்தில் ஏற்பட்ட சீர்திருத்தங்கள் ஜனங்களுக்குத்திருப்தியளிக்கவில்லை. கனடா ஆஸ்திரேலியா முதலிய சுய ஆட்சி தேசங்களைப்போலவே தங்களுக்கும் சுய ஆட்சி கிடைக்க

வேண்டுமென்று இந்தியர்கள் கிளர்ச்சி செய்துகொண்டேயிருந்தார்கள். இதற்கிடையில் 1914-ம் ௵ ஆகஸ்டு மாதத்தில் ஐரோப்பிய யுத்தம் துடங்கவே, எல்லாருடைய கவனமும் யுத்தத்தில் ஜயமடையவேண்டுமென்ற விஷயத்தில் செலுத்தப்பட்டது. இந்தியர்கள் இங்கிலாந்துக்கு யுத்தத்திற்கு வெண்டிய பணம், சேனை, சாமான்கள் முதலியவைகளைக்கொடுத்து உதவிபுரிந்தார்கள். இந்தியா செய்த பேருதவிக்கு இங்கிலாந்து மிகவும் சந்தோஷப்பட்டுப் பிரதியுபகாரம் செய்யவேண்டுமென்ற எண்ணங் கொண்டு 1917-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 20உயில் ஐரோப்பிய யுத்தம் தீவிரமாக நடந்துகொண்டிருக்கும் சமயம் இந்திய ராஜரீக சம்பந்தமாக பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாருடைய கொள்கையையும் அபிப்பிராயத்தையும், இந்தியா செக்ரடரி மான்டேகு அவர்கள் அடியிற்கண்டபடி வெளியிட்டார். "இந்தியா கவர்ன்மெண்டாருடைய சர்வ சம்மதத்துடன் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் இந்திய ராஜரீக சம்பந்தமாகத்தீர்மானித்திருக்கும் அரசு முறை என்னவென்றால், இந்திய ராஜரீக நிர்வாகத்தில் ஒவ்வொரு பிரிவிலும் இந்தியர்கள் அதிகமாக நியமிக்கப்படவும் சேர்க்கப்படவும் வேண்டும் என்பதும், சுய ஆட்சி முறையைக் கைப்பற்றிய ஸ்தாபனங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக அபிவிருத்தி செய்யவேண்டுமென்பதும், அவைகளின் மூலமாக பிரிட்டிஷ் சர்வாதிகாரத்துக்குள்பட்டு இந்தியா பொறுப்பு ஆட்சி அடையவேண்டும் என்பதுமே." ஷெ அறிக்கையில் இந்தியா பொறுப்பு ஆட்சி அடையவேண்டும் என்று சொல்லப்பட்டதே யொழிய சுய ஆட்சி என்று சொல்லப்படவில்லை. ஆனால் அப்பொழுது நமது கவர்னர் ஜெனரலாக இருந்த செம்ஸ்போர்டு பிரபு, பொறுப்பு ஆட்சியும் சுய ஆட்சியும் ஒன்றுதான் என்று வியாக்கியானம் செய்தார். ஷெ அறிக்கையை அனுசரித்து இந்திய அரசாட்சியில் என்ன என்ன சீர்திருத்தங்கள் செய்யவேண்டுமென்று ஆராய்வதற்காக இந்தியா செக்ரடரி மான்டேகு அவர்களும், இந்தியா கவர்னர் ஜெனரல் செம்ஸ்போர்டு பிரபு அவர்களும் இந்தியாமுழுவதும் சுற்றி ஆங்காங்குள்ள கவர்ன்மெண்டார், பொது ஜனங்கள், முதலியவர்களுடைய அபிப்பிராயத்தை அறிந்து ஒரு ரிப்போர்ட்டுவெளியிட்டார்கள். ஷெ ரிப்போர்ட்டை ஆதாரமாகக்கொண்டு, இங்கிலாந்து பார்லி

மெண்ட் சபையில் 1919-ம் வருஷத்தில் இந்தியா கவர்ன்மெண்ட் ஆக்டில் அநேகம் மாறுதல்கள் செய்யப்பட்டன. ஷை மாறுதல்கள் 1920-ம் வருஷத்துக்கடைசியிலிருந்து ஊர்ஜிதத்துக்குக்கொண்டு வரப்பட்டு தற்காலம் அமுலிலிருக்கின்றன. அவைகளை நாம் சுருக்கமாக அடுத்த அத்தியாயத்தில் ஆராய்வோம்.

# அத்தியாயம் 3.

## தற்கால அரசியல் முறை.

13. 1920-ம் வருஷம் வரை ஊர்ஜிதத்திலிருந்த ராஜரீக முறையில் நான்கு முக்கியமான விஷயங்கள் கவனிக்கத்தக்கவை:—

(a) 1920-ம் வருஷம் வரை எல்லா டிபார்ட்மெண்டுகள் சம்பந்தமாக எல்லா மாகாண கவர்ன்மெண்டுகளும் இந்தியா கவர்ன்மெண்டாருடைய உத்திரவுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். மாகாண கவர்ன்மெண்டுகளுடைய வரவு செலவு திட்டம், மாகாணங்களின் வரி வசூல் பாத்தியம் கடன்வாங்கும் பாத்தியம் இவை எல்லாம் இந்தியா கவர்ன்மெண்டின் ஆளுகைக்கு உட்பட்டு இருந்தது. மாகாணங்களில் ஏற்படுத்த வேண்டிய சட்டதிட்டங்களையும் கூட இந்தியா கவர்ன்மெண்டாரின் உத்தரவுக்கு அனுசரித்தே ஏற்படுத்தவேண்டும்.

(b) 1920-ம் வருஷம் வரை நிர்வாகம் செய்யும் அதிகார வர்க்கத்தினரே சட்ட திட்டங்கள் செய்ய உரிமை உள்ளவர்களாக இருந்தார்கள். சட்ட சபை தனியாகவும் நிர்வாக சபை தனியாகவும் கருதப்படவில்லை. சட்ட சம்பந்தமாக ஆலோசனைக்காகமட்டும் நிர்வாக சபைக்கு அதிகப்படியாகச் சில மெம்பர்கள் சேர்க்கப்பட்டார்கள். ஆனால் அவர்கள் சட்ட சபை மெம்பர்களாகக் கருதப்படாமல் சட்டதிட்டங்கள் ஏற்படுத்துவதற்காக நிர்வாக சபை உப மெம்பர்களாகக் கருதப்பட்டார்கள்.

(c) இந்தியா கவர்ன்மெண்ட் சம்பந்தமாகவோ அல்லது மாகாண கவர்ன்மெண்டார்கள் சம்பந்தமாகவோ எல்லா விஷயங்களி

லும் தலையிட்டு உத்திரவு பிறப்பிக்க இந்தியா செக்ரடரிக்கு அதிகாரம் உண்டு. அந்த உத்திரவுக்கு எல்லா கவர்ன்மெண்டுகளும் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். கவர்னர் ஜெனரல் முதல் ஓர் கீழ் கிராம அதிகாரிவரை ஒவ்வொரு ஆபீஸரும் இந்தியா செக்ரடரிக்குக் கீழ்ப்படிந்தவர்களே.

(d) முனிசிபாலிடிகளிலும் லோகல்போர்டுகளிலும் சில மெம்பர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட போதிலும் அவைகள் அந்தந்த ஜில்லா அதிகாரிக்குக் கீழ்ப்பட்ட ஒரு டிபார்ட்மெண்டாகக் கருதப்பட்டு அவைகளுக்கு ஒரு சர்க்கார் உத்தியோகஸ்தர் தலைவராகயிருந்தார்.

மேலேகண்ட அம்சங்கள் எல்லாவற்றிலும் மாறுதல்கள்செய்ய வேண்டுமென்றும் புதிய சீர்திருத்தங்கள் இதனடியிற்கண்ட நான்கு நியமனங்கள் உள்ளதாக யிருக்கவேண்டும் என்றும் மாண்டேகு அவர்களும் செம்ஸ்போர்ட்பிரடுவும் தீர்மானித்தார்கள்:-

1. ஸ்தல சுய ஆட்சி கொடுத்துவிடவேண்டும். அதாவது எல்லா முனிசிபாலிடிகளிலும் லோகல் போர்டுகளிலும் மெம்பர்கள் ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாகவே யிருக்கவேண்டும். ஸ்தல ஸ்தாபன விஷயமான சகல காரியாதிகளையும் அவர்களே நிர்வகிக்கவேண்டும்.

2. மாகாண கவர்ன்மெண்டுகள் நாளடைவில் பூராவும் பொறுப்பாட்சியுள்ளவைகளாக ஆகவேண்டும் என்ற நோக்கத்துடன் கொஞ்சம் பொறுப்பாட்சி இப்பொழுதே அளித்து, அது சம்பந்தப்பட்டமட்டில் இந்தியா கவர்ன்மெண்டாரின் அதிகாரத்தைக் கூடியவரையில் குறைக்கவேண்டும்.

3. இந்தியா கவர்ன்மெண்டில் பொறுப்பு ஆட்சி ஏற்படுத்த சாவதானமில்லாதபோதிலும், இந்திய சட்டசபையைப் பெரிதாக்கி அதில் ஜனப்பிரதிநிதிகளின் எண்ணிக்கையை அதிகரிக்கவேண்டும்.

4. மேலேகண்ட மாறுதல்கள் ஊர்ஜிதத்துக்குவரவர இந்தியா செக்ரடரியின் அதிகாரம் கொஞ்சம் கொஞ்சம் குறைபடவேண்டும்.

மேலேகண்ட நியமனங்களை அனுசரித்து 1919-ம்வருஷத்து இந்தியா கவர்ன்மெண்ட் ஆக்ட்டுப்படிக்கும் ரூல்கள்படிக்கும் தற்கால ராஜரீகம் நடைபெறுகிறது.

14. இந்தியா பல மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது என்று ஏற்கனவே நாம் அறிந்திருக்கிறோம். மாகாணங்களுக்கு அரைகுறையாகப் பொறுப்பு ஆட்சி கொடுப்பதற்காக ராஜரீக சம்பந்தமான எல்லாவிஷயங்களையும் (subjects) இரண்டு பிரிவாகப்பிரித்துஇந்தியாகவர்ன்மெண்டார் கவனிக்கவேண்டியவைகள் இன்னது என்றும், மாகாணகவர்ன்மெண்டுகள் கவனிக்கவேண்டியவைகள் இன்னது என்றும் நிஷ்கரிஷை செய்யவேண்டியது அவசியமானதால், அந்தப்படி யெல்லா விஷயங்களையும் இரண்டு பிரிவாகப் பிரிக்கப்பட்டது. இந்தியா கவர்ன்மெண்டார் நிர்வகிக்க வேண்டியவிஷயங்களுக்கு(central subjects)சென்ட்ரல்சப்ஜெக்ட்ஸ் என்றும் மாகாண கவர்ன்மெண்டுகள் நிர்வகிக்கவேண்டிய விஷயங்களுக்கு (Provincial subjects) மாகாண சப்ஜெக்ட்ஸ் என்றும் பெயர். அரை குறைப் பொறுப்பாட்சியும் கூட எல்லா மாகாணங்களுக்கும் உடனே கொடுப்பது சாவதானமல்ல என்று சர்க்காருக்கு தோன்றியதால், மாகாணங்களை கவர்னர் ஆளுகைக்குட்பட்ட மாகாணங்கள் என்றும், சீப் கமிஷனர் ஆளுகைக்குட்பட்ட மாகாணங்கள் என்றும் இருவகையாகப் பிரிக்கப்பட்டன. மதராஸ், பம்பாய், வங்காளம், ஐக்கியமாகாணம், பஞ்சாப், ஒரிஸா சேர்ந்த பீஹார், பிரார் சேர்ந்த மத்தியமாகாணங்கள், அஸ்ஸாம், பர்மா, இவைகள் ஒன்பதும் கவர்னர் மாகாணங்கள், இம்மாகாணங்களில் அரசாட்சி சம்பந்தமான எல்லாமாகாண விஷயங்களையும் (provincial subjects) இரண்டாகப்பிரித்து இரட்டைஆட்சி ஸ்தாபனம் செய்யப்பட்டது. அதாவது கவர்னருக்கு ஆலோசனை சொல்ல மந்திரிசபை யென்றும், நிர்வாகமெம்பர்கள் சபையென்றும் இரண்டு சபை ஏற்படுத்திச்சில இலாகாக்களை மந்திரிகள் வசமும் மற்ற இலாகாக்களை மெம்பர்கள் வசமும் பரிபாலனத்துக்காக விடப்பட்டது. இந்த இரண்டு சபைக்கும் கவர்னர் தலைமை வகித்தார். மந்திரிகள் நிர்வகிக்கும் விஷயங்களுக்கு மாற்றப்பட்ட விஷயங்கள்

(transferred subjects), அதாவது மந்திரிகளுக்கு அதிகாரம் மாற்றப்பட்டவைகள் என்றும், மெம்பர்கள் நிர்வகிக்கும் விஷயங்களுக்கு நிறுத்திவைக்கப்பட்ட அல்லது ஒதுக்கி வைக்கப்பட்ட விஷயங்கள் (Reserved subjects) அதாவது மந்திரிகளுக்கு அதிகாரம் மாற்றுமல் நிறுத்தப்பட்டவைகள் என்றும் பெயர் விளங்கி வருகிறது. மாற்றப்பட்ட விஷயங்கள் சம்பந்தமாக ஆலோசனை செய்யவேண்டியிருக்கும் பக்ஷத்தில் அதில் கவர்னரும் மந்திரிகளும் கலந்து கொள்ளவேண்டியது. மற்ற விஷயங்கள் சம்பந்தமான ஆலோசனைகளில் கவர்னரும் மெம்பர்களும் மட்டுமே கலந்து கொள்ளவேண்டியது. கவர்னரும் மந்திரிகளும் சேர்ந்த பாதி கவர்ன்மெண்டுக்கு மாற்றப்பட்ட பாதி என்றும், கவர்னரும் மெம்பர்களும் சேர்ந்த பாதி கவர்ன்மெண்டுக்கு நிறுத்தப்பட்ட பாதி என்றும் பெயர் விளங்கிவருகிறது. ஒரு விஷயம் மாற்றப்பட்ட இலாகாவைச்சேர்ந்ததா அல்லது மாற்றப்படாத இலாகாவைச் சேர்ந்ததா என்று சந்தேகம் ஏற்பட்டால் அதைக்கவர்னர் தீர்மானம் செய்யவேண்டியது. ஒருவிஷயம் மேற்படி இரண்டு இலாகாக்களையும் பாதிக்கக் கூடியதாயிருக்கும்பக்ஷத்தில் மந்திரிகளும், நிர்வாக சபை மெம்பர்களும் கலந்து யோசனைசெய்து முடிவுக்கு வரவேண்டும். அவர்களுக்குள் அபிப்பிராய பேதம் இருக்கும்பக்ஷத்தில் அதைக் கவர்னர் பைசல் செய்யவேண்டும்.

மந்திரிகளுக்கு மாற்றப்பட்ட விஷயங்களில் முக்கியமானவை யாவன:— ஸ்தல ஸ்தாபனம், சுகாதாரம், வைத்தியம், இந்தியக் கல்வி, விவசாயம், கைத்தொழில், கலால், கூட்டுறவு, பொதுவேலைகள். மாற்றப்படாத விஷயங்களில் முக்கியமானவைகளாவன:- தண்ணீர், பாசனம், வாய்க்கால், ஐரோப்பியக் கல்வி, நிலவரி, போலீஸ், சட்டங்கள், ஜெயில்கள், கடன்வாங்குதல், பாக்டரிகள்.

சென்னைராஜதானிக்குநான்குநிர்வாகசபைமெம்பர்களும், மூன்று மந்திரிகளும் இருக்கிறார்கள். நிர்வாகசபைமெம்பர்கள் மன்னர் அவர்களால் நியமிக்கப்பட்டு மாதம் ரூ 5333/5/4 சம்பளம் வாங்குகிறார்கள். மந்திரிகள் கவர்னர் அவர்களால் நியமிக்கப்பட்டு மாதம் ரூ 4000/- சம்பளம் வாங்குகிறார்கள்.

மாகாணங்களில் பொறுப்பாட்சி ஏற்படுத்தவேண்டுமென்ற எண்ணத்துடன் மேற்கண்டபடி இரட்டை ஆட்சி அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருப்பதினால் மந்திரிகள் மாகாணசட்டசபைக்குப் பொறுப்பாளிகளாக ஆக்கப்பட்டார்கள். அதாவது மந்திரிகள் செய்யும் காரியங்கள் சட்டசபைமெம்பர்களுக்குப் பிடித்தம் இல்லாமலிருக்கும் பக்ஷத்தில் சட்டசபையில் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவரப்பட்டு அது சட்ட சபையில் நிறைவேறினால் மந்திரிகள் தங்கள்பதவியை ராஜீநாமா செய்யவேண்டும் என்றசம்பிரதாயம் ஏற்பட்டிருக்கிறது. இந்தக்காரணத்தினால் சட்டசபையில் மெஜாரிட்டிக்கட்சியின் தலைவரைக்கலந்துகொண்டு எந்தமெம்பர்களைமந்திரிகளாக நியமித்தால் அவர்களுக்கு மெஜாரிட்டிக் கட்சியின் ஆதரவு கிடைக்குமோ அவர்களை மந்திரிகளாக நியமிப்பது வழக்கம்.

15. மாகாணங்களில் மந்திரிகளுக்கு மாற்றப்படாத விஷயங்களின் நிர்வாகசப்பந்தமாக இந்தியா கவர்ன்மெண்டாருக்கு மாகாண கவர்ன்மெண்டுகளின்பேரில் பூரண அதிகாரம் உண்டு. மந்திரிகளுக்கு மாற்றப்பட்ட விஷயங்கள் சம்பந்தமாக மாகாண கவர்மெண்டார்களின் நிர்வாகத்தில் பொதுவாக இந்தியா கவர்ன்மெண்டார் தலையிட அதிகாரமில்லை. ஆனால் அடியிற்கண்ட விஷயங்கள் சம்பந்தமாக இந்தியா கவர்ன்மெண்டாரின் உத்திரவுகளுக்கு மாகாண கவர்ன்மெண்டுகள் கீழ்ப்படியவேண்டும்:—

(a) இந்தியா கவர்ன்மெண்டார் ஏதாவது தகவல்கேட்டால் அதை மாகாணங்களில் மாற்றப்பட்ட பாதி கவர்ன்மெண்டும் தெரிவிக்கக்கட்டுப்பட்டவர்கள்.

(b) இந்தியா கவர்ன்மெண்டார் நேரில் நிர்வகித்துவரும் சில விஷயங்களைச் சரியானபடி நிர்வகிப்பதற்கு மாகாண கவர்ன்மெண்டுகளில் இரண்டு பாதிக்கும் இந்தியா கவர்மெண்டார் உத்திரவிட அவசியமேற்படலாம். உதாரணமாக இந்தியன் சிவில் சர்வீஸ் ஆபீஸர்கள் இந்தியா செக்ரடரிக்கும் கவர்னர் ஜெனரலுக்கும் உட்பட்டவர்கள். ஷை ஆபீசர்களில் அநேகம் பேர்கள் மாகாணங்களில் மந்திரிகள் நிர்வகிக்கும் இலாகாக்களில்உத்தியோகம்

வஹிக்கிறார்கள். அவர்கள் சம்பந்தமாக கவர்னர் ஜெனரல் அவர்களும் இந்தியா செக்ரடரியும் பிறப்பிவிக்கும் உத்திரவுகளுக்கு அனுசரித்துத்தான் மாகாண மந்திரிகள் நடக்கவேண்டும்.

(c) அன்னிய நாடுகள் சம்பந்தமான எல்லாவியவகாரங்களும் இந்தியா கவர்ன்மெண்டைப்பொறுத்ததே. இந்த விஷயங்களில் இந்தியா கவர்ன்மெண்டார் செய்யும் தீர்மானங்கள் மாகாணங்களில் மாற்றப்பட்ட இலாகாக்களையும் கட்டுப்படுத்தத்தக்கது.

(d) மாகாணங்களுக்கு மாற்றப்பட்டிருக்கும் அநேகம் விஷயங்கள் சம்பந்தமாகச் சட்டதிட்டங்கள் ஏற்படுத்தும் அதிகாரம் இந்திய சட்டசபைக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஷை சட்டதிட்டங்கள் மூலமாகவும் இந்தியா கவர்ன்மெண்டார் மாகாணங்களில் மந்திரிகளுக்கு மாற்றப்பட்டிருக்கும் விஷயங்கள் சம்பந்தமாக அதிகாரம் செலுத்தலாம்.

(e) மாகாணங்களில் சட்ட சபைகளில் ஏற்படுத்தப்படும் சட்டதிட்டங்களுக்கு கவர்னர் ஜெனரல் அவர்களின் சம்மதம் அவசியம். சில விஷயங்கள் சம்பந்தமாக மசோதாவைச் சட்டசபையில் பிரேரிப்பதற்கு முன்னதாகவே அவருடைய சம்மதம்பெறவேண்டும். இந்தியா முழுவதுக்கும் ஆர்டினன்ஸ் (ordinance) என்ற அவசரச்சட்டம் ஏற்படுத்த கவர்னர் ஜெனராலுக்கு மட்டும் அதிகாரம் உண்டு. இவைகள் மூலமாக இந்தியா கவர்ன்மெண்டார் மாகாணங்களில் மாற்றப்பட்டிருக்கும் விஷயங்களிலும் அதிகாரம் செலுத்தலாம்.

(f) மாகாணங்களின் பொருள் வரவு (finance) சம்பந்தமாக இந்தியா கவர்ன்மெண்டுக்கும் இந்தியா செக்ரடெரிக்கும் சில அதிகாரங்கள் உண்டு. அவைகளில் முக்கியமானவை என்னவென்றால் மாகாணங்கள் கடன் வாங்கவேண்டுமானால் இந்தியா கவர்ன்மெண்டின்சம்மதம் பெறவேண்டும். மாகாணங்களில் ஒவ்வொரு வருஷமும் சிலவுபோக மீதத்தொகைகளை இந்தியா கவர்ன்மெண்டார் வசம் கொடுத்துவைக்கவேண்டும். ஒரு குறிப்பிட்ட தொகை எப்பொழுதும்

அவர்கள் கைவசம் இருக்கவேண்டும். மாகாணங்களில் சில உத்தியோகங்களைப் புதிதாக ஏற்படுத்த வேண்டுமானால் இந்தியா செக்ரடரியின் சம்மதத்தைப் பெற்றுக்கொண்டுதான் செய்யவேண்டும். இம்மாதிரி இன்னும் பல விஷயங்களில் மாகாணங்களில் மந்திரிகள் இலாகாக்களிலும் இந்தியா செக்ரடரியும் இந்தியா கவர்ன்மெண்டாரும் தலையிடலாம்.

16. சீப் கமிஷனர் மாகாணங்களில் 1920ஆம்-த்துச் சீர்திருத்தங்கள் யாதொரு மாறுதல்களும் செய்யவில்லை. இவைகளைச் சீப் கமிஷனர் என்னும் அதிகாரி, கவர்னர்ஜெனரல் அவர்களால் நியமிக்கப்பட்டு, கவர்னர் ஜெனரலின் நிர்வாகசபையார் ஏற்படுத்தும் உத்திரவுக்குட்பட்டு, நிர்வகித்து வருகிறார். இவ்விதம் பரிபாலனம் செய்யப்படும் மாகாணங்களாவன:- டில்லி, பிரிட்டிஷ் பலுசிஸ்டான், ஆஜ்மீர் மார்வாரா, குடகு, அந்தமான் நைகோபார் தீவுகள். இவைகள் ஒன்றுக்கும் நிர்வாகசபை கிடையாது. குடகைத்தவிற மற்றவைகளுக்கு யாதொரு சட்டசபையும் கிடையாது.

17. இந்தியா கவர்ன்மெண்ட் சம்பந்தமாக, இந்திய சட்டசபையில் இதின் பின்னால் விவரித்திருக்கும் மாறுதல்களைத் தவிற, விசேஷமாக வேறு யாதொரு மாறுதல்களும் கிடையாது. மாகாண கவர்ன்மெண்டுகளைப்போலவே இந்தியா கவர்ன்மெண்டிலும் எல்லா விஷயங்களையும் இலாகாக்களாகப் பிரித்து, ஒன்று அல்லது அதிகப்பட்ட இலாகாக்கள் ஒவ்வொரு நிர்வாகசபை மெம்பர் வசம் விடப்பட்டிருக்கின்றன. தற்காலம் ராணுவத் தலைவர் உள்பட 7 மெம்பர்கள் கவர்னர் ஜெனரல் அவர்களின் நிர்வாக சபையிலிருக்கிறார்கள். அவர்கள் அடியிற்கண்ட இலாகாக்களை நிர்வகிக்கிறார்கள்:—

| மெம்பர் | இலாகாக்கள் |
|---|---|
| 1. ராணுவ மெம்பர் | ராணுவம் |
| 2. ஹோம் மெம்பர் | இந்தியா உள்த்துரை சம்பந்தமான இலாகா |
| 3. பொக்கிஷ மெம்பர் | பொக்கிஷ இலாகா |

4. சட்ட மெம்பர் — சட்டம், போலீஸ் முதலியவை
5. வர்த்தக மெம்பர் — ரெயில்வேக்கள், தந்தி, தபால் வியாபாரம், வர்த்தகம்
6. கல்வி மெம்பர் — நிலம், சுகாதாரம், கல்வி
7. கைத்தொழில் மெம்பர் — கைத்தொழில், தொழிலாளிகள்

ராஜீய இலாகாவையும், அன்னிய நாட்டு இலாகாவையும் கவர்னர் ஜெனரல் அவர்களே நேரில் கவனிக்கிறார்கள். மேற்படி ஒன்பது இலாகாக்களுக்கும் ஒன்பது செக்ரடரிகளும், ஒவ்வொரு செக்ரடரிக்குக் கீழ் உதவி செக்ரடரிகள், அண்டர் செக்ரடரிகள் முதலியவர்களும் இருக்கிறார்கள்.

# அத்தியாயம் 4.

## தற்கால இந்திய சட்டசபையும் மாகாண சட்டசபைகளும்.

18. இந்திய சட்டசபை

இது இருபிரிவாகயிருக்கிறது. ஒன்றுக்குக் கவுன்ஸில் அப் ஸ்டேட் (ராஜாங்க சபை) என்றும் மற்றொன்றுக்கு லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளி (ஜனப் பிரதிநிதி சபை) என்றும் பெயர்.

கவுன்ஸில் அப் ஸ்டேட்

இதில் மொத்தம் 60 மெம்பர்கள். அதில் 33 மெம்பர்கள் தேர்தல் செய்து எடுக்கப்பட்டவர்கள். 27 மெம்பர்கள் கவர்னர் ஜெனரல் அவர்களால் நியமிக்கப்பட்டவர்கள்; இதில் 17 மெம்பர்கள் சர்க்கார் உத்தியோகத்திலுள்ளவர்கள்.

இந்த 60 மெம்பர்களில் மதராஸ் மாகாணத்தின் பிரதிநிதிகள் 7 மெம்பர்கள். அதில் ஒரு மகம்மதியரும், 4 மகம்மதியரல்லாதவரும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். ஒரு சர்க்கார் உத்தியோகஸ்தரும் ஒரு சர்க்கார் உத்தியோகஸ்தரல்லாதவரும் கவர்னர் ஜெனரல் அவர்களால் நியமனம் செய்யப்பட்டவர்கள்.

மேற்படி 5 மெம்பர்களைப் பொறுக்கி எடுக்கும் ஓட்டர்கள் அடியிற்கண்டபடி மிகச் செல்வவந்தர்களாகவாவது, அல்லது குறிப்

பிட்ட கௌரவ உத்தியோகம் வகித்தவர்களாகவாவது இருக்க வேண்டும்:—

ரூ 20000/-க்குமேல் வருமானத்திற்கு வருமானவரி செலுத்து பவர்கள்.

ரூ 3000/-க்குமேல் வருஷ வருமானம் வரும் நிலச்சுவான்தார்கள்.

ரூ 1500/- வரை நிலவரி செலுத்துபவர்கள்.

மாகாண சட்டசபைகளிலோ அல்லது இந்திய சட்ட சபையிலோ தற்கால அல்லது மாஜி மெம்பர்களாகயிருப்பவர்கள், ஒரு முனிசிபல் கவுன்சிலில் அல்லது டிஸ்டிரிக்ட் போர்டில் அல்லது கூட்டுறவுபாங்கியில் சேர்மென் உத்தியோகம் வகித்தவர்கள், ஒரு சர்வகலாசாலையில் மெம்பர்ஸ்தானம் வகித்தவர்கள், கவர்ன்மெண்டில் பட்டம்பெற்றவர்களில் சிலர்.

லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளி

இதில் மொத்தம் 145 மெம்பர்கள். 104 மெம்பர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். 26 மெம்பர்கள் கவர்னர் ஜெனரல் அவர்களால் நியமிக்கப்பட்ட உத்தியோகஸ்தர்கள். 15 மெம்பர்கள் கவர்னர் ஜெனரல் அவர்களால் நியமிக்கப்பட்ட சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் அல்லாதவர்கள். இந்த 145 மெம்பர்களில் மதருஸ் பிரதிநிதிகள் 18 மெம்பர்கள். அவர்களில் இரண்டு சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், மகம்மதிய ஓட்டர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மூன்று பிரதிநிதிகள், மகம்மதியரல்லாத ஓட்டர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட 10 பிரதிநிதிகள், ஐரோப்பியர்கள், நிலச் சுவான்தார்கள் இந்திய வர்த்தகர்கள், இவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட மூன்று பிரதிநிதிகள்.

அஸெம்பிளிக்குத் தேர்தல் செய்ய ஓட்டர்களுக்கு அடியிற் கண்ட யோக்யதாம்சம் இருக்கவேண்டும்:—

a. பொதுத் தொகுதிகள்.

ஒவ்வொரு ஓட்டரும் அந்தந்தத் தொகுதியில் 120 நாள் குடியிருப்பதுடன் அடியிற்கண்ட யோக்யதாம்சம் உள்ளவர்களாகயிருக்கவேண்டும்;

1. வருமானவரி செலுத்துபவர்கள்.

2. ரூ 20/-க்குக் குறையாமல் சொத்துவரி அல்லது கம்பெனிவரி அல்லது தொழில்வரி செலுத்துபவர்கள்.

3. ரூ 50/-க்குக் குறையாமல் கிஸ்தி செலுத்துபவர்கள்.

4. ரூ 50/-க்குக் குறையாமல், பட்டாதாரிடம் நிலக் குத்தகைதார்கள்.

5. ரூ 50/- வருஷ வருமானம் வரும் இனாம்தார்கள், நிலச்சுவான்தார்கள், அல்லது அவர்களிடம் குத்தகைதார்கள்.

b. ஸ்பெஷல் தொகுதிகள்.

வியாபாரத்திலிருந்து ரூ 10000/-க்கு மேல் வரும்படிக்கு வருமான வரி செலுத்துபவர்கள் மட்டும், வர்த்தகத் தொகுதியின் ஓட்டர்கள்.

ஜமீந்தார்கள், மிராஸ்தார்கள், மிட்டாதார்கள் இவர்களே நிலச் சுவான்தார் தொகுதியின் ஓட்டர்கள்.

19. சென்னை சட்டசபை

இதில் தற்காலம் மொத்தம் 132 மெம்பர்கள் இருக்கிறார்கள். அவர்களில் 98 மெம்பர்கள் அடியிற்கண்டபடி தேர்தல்செய்யப்பட்டவர்கள். 34 மெம்பர்கள் கவர்னர் அவர்களால் நியமுகம் செய்யப்பட்டவர்கள்.

a. பொதுத் தொகுதிகள்

56 மெம்பர்கள் ஜில்லாக்களில் மகம்மதியரல்லாத கிராமத் தொகுதிகளால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

9 மெம்பர்கள் மகம்மதியரல்லாத நகரத் தொகுதிகளால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

2 மெம்பர்கள் மகம்மதிய நகரத் தொகுதிகளால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

11 மெம்பர்கள் ஜில்லாக்களில் மகம்மதிய கிராமத் தொகுதிகளால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

5 மெம்பர்கள் இந்திய கிருஸ்துவத் தொகுதிகளாலும், ஒரு மெம்பர் ஆங்கிலோஇந்தியத் தொகுதியாலும், ஒரு மெம்பர் ஐரோப்பியத் தொகுதியாலும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

b. ஸ்பேஷல் தொகுதிகள்

6 மெம்பர்கள் நிலச்சுவான்தார்களாலும், 6 மெம்பர்கள் வர்த்தக சங்கத்தாராலும், ஒருமெம்பர் சர்வகலாசாலை பட்டதாரிகளாலும், தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

c. நியமிக்கப்பட்ட மெம்பர்கள்

11 மெம்பர்கள் கவர்னர் அவர்களால் நியமிக்கப்பட்ட சர்க்கார் உத்தியோகஸ்தர்கள். 23 மெம்பர்கள் கவர்னர் அவர்களால் நியமிக்கப்பட்ட சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் அல்லாதவர்கள்.

ஒட்டர்களின் யோக்கியதாம்சம். (a) பொதுத்தொகுதிகள்.

(1) வருஷம் ஒன்றுக்கு ரூபாய் 3/-க்கு குறையாமல் முனிசிபல் வரி செலுத்துபவர்கள்.

(2) வருஷம் ரூ 10/-க்குக்குறையாமல் கிஸ்தி செலுத்தும் நிலச்சுவான்தார்கள்.

(3) சென்னைப்பட்டணத்தில் வருஷம் 60/-க்குக்குறையாமல் வாடகைக்கு விடக்கூடிய வீட்டில் குடியிருப்பவர்கள்.

(4) வருமானவரி செலுத்துபவர்கள்.

(5) ராணுவத்தில் வேலை பார்த்த மாஜி உத்தியோகஸ்தர்கள், மாஜி சிப்பாய்கள்.

(b) ஸ்பெஷல் தொகுதிகள்.

ரூ 3000/-க்குக் குறையாமல் வருஷ நில வருமானம் வரும் ஜமீந்தார்கள், மிட்டாதார்கள், மிருசுதார்கள் இவர்களும், ரூ 3000/-க்குக்குறையாமல் சர்க்காரிடமிருந்து மாலிகானு அல்லவுன்ஸ் கிடைக்கிறவர்களும், நிலச்சுவான்தார்கள் தொகுதிகளின் ஓட்டர்கள்.

குறிப்பிட்ட வர்த்தக சங்கங்களின் மெம்பர்களே வர்த்தக சங்கத்தொகுதிகளின் ஓட்டர்கள்.

சர்வகலாசாலைப் பட்டதாரிகள் 7 வருஷத்துக்கு முன்னால் பட்டம் பெற்றிருக்கவேண்டும்.

# அத்தியாயம் 5.

## வெள்ளையறிக்கைத் திட்டமும், 1935-ம் வருஷத்து கவர்ன்மெண்ட் ஆப் இந்தியா ஆக்டும்.

20. 1920-ம்வருஷத்தில் அமுலுக்குக்கொண்டுவந்த சீர்திருத்தங்கள் தாற்காலிகமாக ஏற்பட்டவைகள். இந்தியர்களுக்குப் பொறுப்பாட்சி கொடுத்தால் அவர்கள் ராஜரீகத்தைச்சரியாக நிர்வகிப்பார்களா என்று பரிக்ஷிப்பதற்காகவே கவர்னர் மாகாணங்களில் இரட்டை ஆட்சி ஸ்தாபிக்கப்பட்டது. ஷை இரட்டை ஆட்சி எந்தமட்டில் சரிவர நடத்தப்பட்டது என்றும், பிரிதிநிதிகள் அடங்கிய ஸ்தாபனங்கள் எந்தமட்டில் அபிவிருத்தி யடைந்திருக்கின்றனவென்றும், எந்தமட்டில் பொறுப்பாட்சி இந்தியாவுக்குக் கொடுக்கலாமென்றும் விசாரித்து ரிப்போர்ட் செய்வதற்காக ஒரு கமிஷன் 1919-ம் வருஷத்து ஆக்ட் வெளியிட்ட 10 வருஷத்துக்குமேல் ஏற்படுத்தவேண்டும் என்று மேற்படி ஆக்ட் 84 (A) பிரிவுப்படி நிஷ்கரிஷை செய்யப்பட்டிருந்தது. 1920/ம் வருஷத்தில் அமுலுக்குக் கொண்டுவரப்பட்ட சீர்திருத்தங்கள் திருப்திகரமானதில்லை யென்றும், இரட்டை ஆட்சி அதிகாரத்தை நிர்வகிப்பது மிகவும் கஷ்டமாகயிருக்கிறதென்றும், தங்களுக்குச் சுய ஆட்சி வேண்டுமென்றும், இந்தியர்கள் சட்டசபைகளிலும் சமாசாரப் பத்திரிகைகளிலும், பொதுஜன மீட்டிங்குகளிலும், விவாதம் செய்துகொண்டிருந்தார்கள். இந்த விடாப்பிடியான விவாதத்தினால் பிரிட்டிஷ் சர்க்கார் 1927-ம் வருஷத்திலேயே ஒரு கமிஷன் நியமித்தார்கள். அதில் பூராவும் இங்கிலிஷ்காரரே. மொத்தம் 7 மெம்பர்கள். அவர்களுக்கு அக்கிராசனாதிபதி பிரபல வக்கீலாகயிருந்தவரும் தற்காலம் இங்கிலாந்தில் ஹோம் செக்ரடரியாகவுமிருக்கும் சர்ஜான் சைமன் அவர்கள். மேற்படி கமிஷனில் இந்தியர்கள் ஒருவரும் இல்லாததால் அத்துடன் இந்தியர்கள் ஒத்துழைப்பதா அல்லது ஒத்துழைக்கக்கூடாதா என்ற விஷயமாக நம்தேசத்தில் குழப்பமும், வதுப்புவாதமும் பிளவும் ஏற்பட்டது. சிலர் ஒத்துழைத்தார்கள், சிலர் ஒத்துழைக்கவில்லை. ஆனால் சைமன் கமிஷனர்கள் சொல்லும் அபிப்பிராயம் வேதவாக்காகக் கருதக்கூடாதென்றும், இந்தியாவுக்கு சுயராஜ்ஜியம் கொடுக்க

வேண்டுமென்றும், அதுவிஷயமான விவரங்களைப்பரிசீலனை செய்வதற்காக இந்தியர்களும் இங்கிலிஷ்காரரும் சேர்ந்து சமஅந்தஸ்துடன் ஒரு வட்டமேஜையைச்சுற்றிக்கூடி விஷயங்களைத்தீர்மானிக்க வேண்டும் என்றும், பொதுவாக எல்லா இந்தியர்களும் அபிப்பிராய பேதம் அதிகம் இல்லாமல் வற்புறுத்திக் கொண்டேயிருந்தார்கள். சர்ஜான் சைமன் அவர்களும் இந்தியாவில் இருந்த அமளியை உத்தேசித்து அவ்விதம் வட்டமேஜை மகாநாடுகூட்டுவது சாவதானம் தான் என்று தம்முடைய அறிக்கையை வெளியிடுவதற்கு முன்னமேயே இங்கிலாந்து பிரதமமந்திரிக்குத் தெரிவித்தார். அந்தகாலத்தில் இங்கிலாந்தில் லேபர் கக்ஷி அரசாட்சிபுரிந்துகொண்டிருந்ததாலும், லேபர் கக்ஷிக்கு இந்திய அரசாட்சிசம்பந்தமாக எப்போதும் ஒரு அனுதாபம் இருந்ததாலும்,பிரதம மந்திரி மாக்டோனல்ட் அவர்களும், அவருடைய (Cabinet) மந்திராலோசனை சபையும் அதற்குச் சம்மதித்து, அப்பொழுது கவர்னர் ஜெனரலாகியிருந்த இர்வின் பிரபு அவர்கள் மூலம் 31—10—29-வயில் ஒரு பிரகடனம் வெளியிட்டார்கள். அந்தப் பிரகடனத்தில் இரண்டு முக்கியமான விஷயங்கள் கண்டிருந்தன; முதலாவது, மற்ற சுய ஆட்சி நாடுகளைப்போலவே இந்தியாவும் சுய ஆட்சி அடைய வேண்டும் என்று இந்தியர்கள் விரும்புவதை கவர்ன்மெண்டார் ஒப்புக்கொள்ளுகிறார்கள் என்பது; இரண்டாவது, சைமன் கமிஷன் அறிக்கை வெளியானபின்னும் இந்தியாவுக்குப் புதிய சீர்திருத்தங்களைத்தீர்மானிப்பதற்கு முன்னும் ஒரு வட்டமேஜை மகாநாடு கூட்டி அதில் இந்தியர்களுடைய அபிப்பிராயத்தையும் தெரிந்துகொள்ளப்படும் என்பது. ஷை பிரகடனத்தை அனுசரித்து 12—11—30-டயில் லண்டன் நகரத்தில் முதல் மகாநாடு நடந்தேறியது. இதற்கு இந்தியப் பிரதிநிதிகள் கவர்னர் ஜெனரல் அவர்களால் நியமிக்கப்பட்டார்கள். காங்கிரஸ் மகாசபை ஒத்துழைக்க மறுத்துவிட்டது. இரண்டாவது மகாநாடு 7–9–31-வயிலும், மூன்றாவது மகாநாடு 13—11—32-வயிலும் கூடிற்று. இரண்டாவது மகாநாட்டுக்கு மட்டும் மகாத்மா காந்தியடிகள் காங்கிரஸின் பிரதிநிதியாகப்போயிருந்தார். மேற்படி வட்டமேஜை மகாநாடுகளில் நடந்த விசாரணைகள், வாதங்கள் முதலியவைகளை ஆதாரமாகக்கொண்டு, இந்திய அரசியலில் என்னென்ன சீர்திருத்தங்

கள் ஏற்படுத்தப்படும் என்பதை விளக்கி இங்கிலிஷ் கவர்ன்மெண்டார் ஒரு வெள்ளைக் காகித அறிக்கையை 1933-ம் வருஷம் மார்ச் மாதம் வெளியிட்டார்கள். மேற்படி வெள்ளையறிக்கையை ஆராய்ச்சி செய்யப் பார்லிமெண்ட் சபையார் ஒரு கூட்டுக் கமிட்டி ஏற்படுத்தி, ஷை கூட்டுக் கமிட்டி யோசனைகளில் கவர்னர் ஜெனரல் அவர்களால் நியமிக்கப்பட்ட சில இந்தியத் தலைவர்களும் கலந்துகொள்ளும்படி ஏற்பாடுசெய்து, மேற்படி கூட்டுக் கமிட்டியின் அறிக்கையையும் மேற்படி வெள்ளைக்காகித அறிக்கையையும் ஆதாரமாகவைத்துக் கொண்டு இந்தியாவில் இனி நடக்கப்போகும் அரசியல் விவரங்களைத் துலக்கி 1935-வருஷத்து கவர்ன்மெண்டு ஆப் இந்தியா ஆக்ட் என்று ஒரு ஆக்ட் பார்லிமெண்ட் சபையில் தீர்மானமாகி மன்னர் அவர்களால் சென்ற ஆகஸ்டுமீ 2வ. ஆமோதிக்கப்பட்டிருக்கிறது.

ஷை ஆக்ட் இந்தியர்களுக்குக் கொஞ்சம்கூடத் திருப்திகாமில்லாதிருந்தாலும், இந்தியர்கள் என்னென்ன சீர்திருத்தங்கள் வேண்டுமென்றார்களோ அவைகள் ஒன்றையாவது அங்கீகரிக்காமலும், இந்தியர்களுடைய அக்கரைக்கு விரோதமாகவும், ஆங்கிலேயர்களுடைய அக்கரைக்குச் சாதகமாகவும், ஆங்கிலேய வர்த்தகம் ஆங்கிலேயக் கைத்தொழில், ஆங்கிலேயர் முதல், இவைகளைப் பாதுகாத்தலே இந்திய கவர்ன்மெண்டாரின் முக்கியமான கடமை என்று கருதக்கூடுமான விஷயங்கள் நிறைந்திருப்பதாக நமது ராஜீய வாதிகள் அபிப்பிராயப்பட்டாலும், புது ஆக்ட் கூடிய சீக்கிரம் அமுலுக்குக்கொண்டுவரப்பட்டு அதன்படி நாம் நடந்துகொள்ள வேண்டிய அவசியமிருப்பதால், அதின் முக்கியமான சாராம்சங்களை நாம் கிரகித்துக்கொள்ள வேண்டியது அத்தியாவசியம். மேலும் ஒரு விஷயம் எவ்வளவு கெடுதியாகயிருந்தாலும் அதில் ஒரு நல்ல அம்சம் இருக்கும் என்ற பழமொழிக்கேற்க, புது சீர்திருத்தங்களில் சில நன்மையான விஷயங்கள் இருப்பதால், அந்த நன்மையை நாம் கிரகித்து, நாளடைவில் இந்தியா பூர்ண சுயராஜ்யம் அடையும்படி வேண்டிய முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டியது அத்தியாவசியம். புதிய சீர்திருத்தங்களின் சாராம்சத்தைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் பின் அத்தியாயங்களில் கூறப்பட்டிருக்கிறது. இவ்வத்தியாயத்தில் அவைகளில் சில முக்கியமான அம்சங்களை மட்டும் குறிப்போம்.

தற்கால ராஜரீகத்துக்கும், இனி வரப்போகும் ராஜரீகத்துக்கும் மூன்று முக்கியமான வித்தியாசங்கள் உண்டு.

1. இப்பொழுது பிரிட்டிஷ் மாகாணங்கள் அடங்கிய பிரிட்டிஷ் இந்தியாவில் ராஜரீகம் பிரத்தியேகமாகவும், நமது இந்திய ராஜாக்களும் நவாப்புகளும் ஆண்டுவரும் இந்திய சமஸ்தானங்களின் ராஜரீகம் பிரத்தியேகமாகவும் நடந்து வருகின்றன. இரண்டுக்கும் பரஸ்பர சம்பந்தம் யாதொன்றும் கிடையாது. நமது கவர்னர் ஜெனரல் அவர்களுக்கு ராஜப் பிரதிநிதி (Viceroy) என்ற நிலைமையில் இந்திய சமஸ்தானங்கள் சம்பந்தப்பட்டமட்டில் சில சந்தர்ப்பங்களில், சில விஷயங்களில் தலையிட பாத்தியமுண்டு. இந்திய சமஸ்தானங்கள் சம்பந்தமான விஷயங்கள் கவர்னர் ஜெனரல் அவர்களால் நேரில் பார்வையிடப்பட்டு வருகின்றன. பிரிட்டிஷ் இந்திய ராஜரீக சம்பந்தமாகத் தலையிடத் தற்காலத்தில் இந்திய சமஸ்தானங்களுக்கு யாதொரு அதிகாரமும் கிடையாது. ஆனால் இனி வரப்போகும் ராஜரீகம் சமஷ்டி ராஜரீகம். அதாவது இந்திய மாகாணங்களும் இந்திய சமஸ்தானங்களும் சேர்ந்து நடத்தப்பெறும் ஐக்கிய ராஜரீகம். இந்தியாவின் மத்திய கவர்ன்மெண்டில் இந்தியமாகாணத்து பிரதிநிதிகளும் இந்திய சமஸ்தானாதிபதிகளின் பிரதிநிதிகளும் இருப்பார்கள். பிரிட்டிஷ் இந்தியா சம்பந்தமான எல்லா விஷயங்களிலும் சமஸ்தானப் பிரதிநிதிகள் ஓட்டுச் செய்யலாம்; சமஸ்தானங்கள் ஐக்கிய சர்க்காருக்கு மாற்றும் எல்லா சமஸ்தான விஷயங்கள் சம்பந்தமாக இந்தியப் பிரதிநிதிகள் ஓட்டுச் செய்யலாம்.

2. தற்காலத்திய மத்திய கவர்ன்மெண்டார் சட்டசபைக்குப் பொறுப்பில்லாதவர்கள். ஆனால் இனி வரப்போகும் ராஜரீகத்தில் ராணுவம், அன்னிய நாடுகள் சம்பந்தமான விஷயங்கள், கிருஸ்துவப் பாதிரிமார்கள் சம்பந்தமான சிலவிஷயங்கள், இன்னும் சில சில்லறை விஷயங்கள் இவைகளைத்தவிர இந்திய சர்க்கார் சம்பந்தமான எல்லா விஷயங்களும் இந்திய சட்டசபையில் மெஜாரிடிக் கட்சியின் ஆதரவையுடைய மந்திரிகள் நிர்வகிப்பார்கள்.

3. தற்காலத்தில் மாகாணங்களில் இரட்டையாட்சி ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இனி வரப்போகும் ராஜரீகத்தில் இரட்டை

யாட்சியை ரத்துச்செய்து பொறுப்பாட்சி ஸ்தாபிக்கப்படும். அதாவது எல்லா இலாகாக்களையும் எல்லா விஷயங்களையும் பொறுப்புவாய்ந்த மந்திரிகளே கவனித்துவருவார்கள். பொதுவாக மாகாண சர்க்கார்கள் மத்திய சர்க்காருக்குக் கீழ்ப் படிந்தவர்கள் அல்ல.

மேலேகண்டபடி மாறுதல்கள் ஏற்பட்டாலும் மாகாண சுய ஆட்சி பூராவாகக் கொடுக்கப்படவில்லை. மேலும், கவர்னர் ஜெனரல் அவர்களுக்கும் கவர்னர் அவர்களுக்கும் விசேஷப்பொறுப்புகளும் பாதுகாப்புகளும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. பிரிட்டிஷ் வர்த்தக சம்பந்தமாகவும், ஆங்கிலேயர்களுக்கும் விசேஷமான சுவதந்திரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவைகளை நாம் விவரமாக ஆராய்வோம்.

# அத்தியாயம் 6.

## இந்திய ஐக்கிய (சமஷ்டி) அரசாட்சி.

21. இந்திய ஐக்கிய அரசாட்சி மாக்ஷிமை தங்கிய நமது மன்னர் அவர்கள்பேரால் நடைபெறும். தற்காலத்தில் இந்தியா செக்ரடரி அவர்களாலும், இந்திய கவர்ன்மெண்டாராலும், மாகாண கவர்ன்மெண்டுகளாலும் செலுத்தப்படும் எல்லா அதிகாரங்களும் 1935ம் வருஷத்து ஆக்டுப்படி நமது மன்னர் அவர்களிடம் வந்தடைந்து அவருக்காக அவருடைய பிரதிநிதிகளாக மத்திய கவர்ன்மெண்டாராகிய ஐக்கிய கவர்ன்மெண்டாரும், மாகாண கவர்ன்மெண்டுகளும் ஆக்டுப்படிக்குள்ள அதிகாரங்களைச் செலுத்துவார்கள். இந்திய ஐக்கிய அரசாட்சி என்பது இந்திய மாகாணங்களும் இந்திய சமஸ்தானங்களும் சேர்ந்து நடத்தும் அரசாட்சி. சாதாரணமாக மற்ற தேசங்களில் ஐக்கிய அரசாட்சி ஸ்தாபிக்கப்படுவதற்குமுன் ஷை அரசாட்சியைச் சேர்ந்த பிரதேசங்கள் தனித்தனி வியக்திகளாகவும், சுவேச்சாதிகாரமுள்ளவைகளாகவும் இருந்து வந்தன. இவைகள் தங்கள் ராஜ்யங்களின் நன்மையையும் அபிவிருத்தியையும் உத்தேசித்தும், அன்னிய தேசங்கள் தங்கள் ராஜ்யங்கள்மேல் படையெடுக்காமல் காத்துக்கொள்வதற்காகவும், எல்லா ராஜ்யங்களையும் பொதுவாக பாதிக்கக்கூடிய விஷயங்களை நிர்வகிப்பதற்காகமட்டும் ஒருமத்திய அதிகாரியை ஏற்படுத்தி, மேற்படி மத்திய அதிகாரிக்குத் தங்க

ளுடைய அதிகாரத்தில் ஒரு பாகத்தைக் கொடுத்து அதற்குக்கீழ்ப் படிந்து நடந்துவரவேண்டுமென்ற ஒப்பந்தத்தின்பேரில் ஐக்கிய அரசாட்சி அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது. இவ்விதமாகத்தான் உதாரணமாக, அமெரிக்காவிலும், ஆஸ்திரேலியாவிலும் ஐக்கிய அரசாட்சி ஸ்தாபிக்கப்பட்டது. அதற்குமுன் அந்த அரசாட்சியைச் சேர்ந்த ஒவ்வொருவியக்தியும் சுவேச்சாதிகாரமுள்ள ராஜ்யங்களாகயிருந்தன. ஆனால் இந்திய ஐக்கிய அரசாட்சி அவ்விதமாக ஸ்தாபிக்கப்பட இயலாது. தற்காலத்தில் இந்திய மாகாணங்களுக்கு யாதொரு சுவேச்சாதிகாரமும் கிடையாது. அவைகள் இந்தியா கவர்ன்மெண்டாருக்குக்கீழ்ப்படிந்தவைகள். ஆகையால் அவைகளை ஐக்கிய அரசாட்சிக்குள் கொண்டுவர வேண்டுமானல் அவைகளுக்கு முதலில் சுய ஆட்சி கொடுத்துப் பிறகு ஐக்கிய அரசாட்சியில் சேர்க்க வேண்டும். இதை உத்தேசித்துத்தான் இந்தியா கவர்ன்மெண்ட் ஆக்டில் இந்திய ஐக்கிய அரசாட்சி ஏற்படுத்துவதற்குமுன் மாகாண சுய ஆட்சி ஏற்படுத்தவேண்டும் என்று வற்புறுத்தப்பட்டிருக்கிறது. ஆகையால் இந்திய ஐக்கிய அரசாட்சியில் சேரும் வியக்திகள் பொறுப்புவாய்ந்த மாகாண கவர்ன்மெண்டுகளும், இந்திய சமஸ்தானங்களுமே.

தற்காலம் பிரிட்டிஷ் இந்தியா கவர்னர் மாகாணங்களாகவும் சீப் கமிஷனர் மாகாணங்களாகவும் பிரிக்கப்பட்டிருக்கின்றன என்று ஏற்கனவே நாம் தெரிந்துகொண்டிருக்கிறோம். மேற்படி சீப் கமிஷனர் மாகாணங்கள் எல்லாவற்றையும் பொறுப்பாட்சியுள்ள மாகாணங்களாக ஏற்படுத்துவது உசிதமில்லையென்று சர்க்கார் அவர்களுக்குத் தோன்றுவதால், அவைகளில் சிலவற்றை மட்டும் கவர்னர் மாகாணங்களாக்கி அவைகளுக்குப் பொறுப்பாட்சி கொடுத்து; மற்ற சீப் கமிஷனர் மாகாணங்களை ஐக்கிய சர்க்காரே சீப் கமிஷனராகிய தங்கள் ஏஜண்டு மூலம் நிர்வகித்துவர வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

22. ஆகையால் இந்திய ஐக்கிய அரசாட்சிக்குச் சேர்ந்த வியக்திகள் அடியிற்கண்டவைகள்:—

a. 11 சுய ஆட்சியுள்ள மாகாணங்கள்: அதாவது மதறாஸ், பம்பாய், வங்காளம், பஞ்சாப், ஐக்கிய மாகாணம், பீஹார் உள்பட

மத்திய மாகாணம், பீகார், அஸ்ஸாம், ஒரிஸா, சிந்து, வடமேற்கு எல்லைப்புற மாகாணம்.

b. ஐக்கிய அரசாட்சிக்கு ஒத்துக்கொள்ளும் இந்திய சமஸ்தானங்கள்.

c. அடியிற்கண்ட சீப் கமிஷனர் மாகாணங்களும் மேற்படி ஐக்கிய அரசாட்சியில் சேர்க்கப்படும்.

டில்லி, பிரிட்டிஷ் பலுசிஸ்டான், அஜ்மீர் மார்வார், குடகு, அந்தமான் நைகோபார் தீவுகள், பாந்த்பிப்லோடா என்னும் பிரதேசம்.

ஐக்கிய அரசாட்சி ஸ்தாபனமாவதற்கு சுயேச்சாதிகாரமுள்ள மாகாணங்களும் சமஸ்தானங்களும் சம்மதிக்க வேண்டும் என்று நாம் ஏற்கனவே கூறியிருக்கிறோம். பிரிட்டிஷ் இந்தியாவைச் சேர்ந்த மாகாணங்களைப் பொறுத்து யாதொரு கஷ்டமுமில்லை. அவைகளுக்குத்தற்காலம் சுயேச்சாதிகாரம் கிடையாது. இந்தியா கவர்ன்மெண்ட் ஆக்டுப்படி அவைகளுக்குச் சுயேச்சாதிகாரம் கொடுக்கப்படுகிறது. அதே ஆக்டுப்படி அவைகள் ஐக்கிய ஆட்சியின் வியக்திகளாகச் சேர்க்கப்படுகிறார்கள். ஆகையால் ஐக்கிய ஆட்சிக்கு ஒத்துக்கொள்ளமாட்டேன் என்று சொல்ல அவைகளுக்கு அதிகாரம் கிடையாது. ஆனால் இந்திய சமஸ்தானங்கள் சம்பந்தப்பட்டமட்டில் அவைகள் ஐக்கிய ஆட்சிக்குச் சம்மதித்தாலொழிய அவைகளை ஐக்கிய ஆட்சியின் வியக்திகளாக ஆக்கமுடியாது. ஆகையால் ஐக்கிய ஆட்சிக்குச் சம்மதிக்கும் ஒவ்வொரு இந்திய சமஸ்தானமும் எழுத்துமூலமாகத் தன் சம்மதத்தைத்தெரிவிக்கவேண்டும். அந்தச்சம்மதத்திற்கு இன்ஸ்ட்ருமெண்ட் ஆப் அக்ஸெஷன் (Instrument of accession) பிரவேச சாசனம் என்றுபெயர். அதில் ஐக்கிய ஆட்சிக்குக்கட்டுப்படும் ஒவ்வொரு சமஸ்தானாதிபதியும் இன்ன இன்ன ஷரத்துகளுக்குக்கட்டுப்பட்டு தான் ஐக்கிய அரசாட்சிக்கு ஒத்துக்கொள்கிறார் என்றும், இன்ன இன்ன விஷயங்கள் சம்பந்தப்பட்டமட்டில் ஐக்கிய கவர்ன்மெண்டாரும், ஐக்கிய சட்டசபையும் செய்யும் உத்திரவுகளுக்கும் சட்டங்களுக்கும் தானும் தன்னுடைய கவர்ன்மெண்டாரும் கட்டுப்படுகிறார்கள் என்றும் வியக்தமாகத் துலக்கவேண்டும்.

ஒவ்வொரு இந்திய சமஸ்தானமும் தனித்தனி எக்ரிமெண்ட் மூலம் ஐக்கிய ஆட்சிக்குச் சம்மதிக்கவேண்டியிருப்பதாலும், ஒவ்வொரு சமஸ்தானாதிபதிக்குந் தான் இன்ன இன்ன விஷயங்களில் மட்டும் ஐக்கிய ஆட்சிக்குக்கட்டுப்படமுடியும் என்று தீர்மானித்துக் கொள்ளச்சுவாதந்திரியமிருப்பதாலும், இந்திய சமஸ்தானங்களின் பிரவேச சாசனங்களின் வாசகங்கள் ஒரேமாதிரியாகயிருந்தபோதிலும், அவைகள் மூலம் கட்டுப்படும் விஷயங்கள் வேறுபடக்கூடும். ஆனால் சில முக்கியமான விஷயங்களை எல்லா இந்திய சமஸ்தானங்களும் ஒப்புக்கொள்ளவேண்டும். அதற்குச் சம்மதிக்காவிட்டால் மேற்படி சமஸ்தானங்களை இந்திய ஐக்கிய அரசாட்சியில் சேர்த்துக் கொள்ள முடியாது என்று சொல்ல நமது மாட்சிமை தங்கிய சக்கிரவர்த்திக்கு அதிகாரம் உண்டு.

# அத்தியாயம் 7.

## இந்திய ஐக்கிய ஆட்சியின் நிர்வாக அதிகாரிகள்.

23. இந்திய ஐக்கிய ஆட்சியை நமது சக்கிரவர்த்தியால் நியமிக்கப்பட்ட கவர்னர் ஜெனரல் அவர்கள், நமது சக்கிரவர்த்தியின் பேரால், நேரிலும், தனக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் ஆபீஸர்கள் மூலமும் நிர்வகித்துவருவார்.

24. இந்திய ஐக்கிய ஆட்சிக்குட்பட்ட எல்லா விஷயங்களும் இரண்டு பிரிவாகப் பிரிக்கப்படும். ஒரு பிரிவை மந்திரி சபையின் உதவியைக்கொண்டும், மற்றொரு பிரிவை மூன்றுக்கு மேற்படாத கவுன்சிலர்கள் (ஆலோசனை சொல்கிறவர்கள்) உதவியைக்கொண்டும் கவர்னர் ஜெனரல் அவர்கள் நிர்வகிப்பார்.

25. மந்திரி சபைக்குட்படாத விஷயங்கள்:

a. ராணுவ விஷயங்கள், வெளிநாட்டு வியவகாரங்கள், கிறிஸ்துவப்பாதிரிகள் சம்பந்தமான சில விஷயங்கள்.

b. எல்லைப்புற தேசசம்பந்தமான விஷயங்கள், வியவகாரங்கள்.

c. எந்த எந்த விஷயங்களை கவர்னர் ஜெனரல் தன் பகுத்தறிவுப்படி (discretion) நடத்தவேண்டுமென்று இந்தியா கவர்ன்

மெண்ட் ஆக்டில் சொல்லப்பட்டிருக்கிறதோ, அந்த விஷயங்கள். (இவைகள் கீழே விவரிக்கப்பட்டிருக்கின்றன).

26. மேலே சொல்லிய விஷயங்களைத் தவிற மற்றவை எல்லாம், மந்திரி சபைக்குட்பட்ட விஷயங்கள்.

27. மந்திரிகள் நியமனம்.

a. ஐக்கிய சட்டசபையில் மெஜாரிட்டிக்கக்ஷிகளின் தலைவர்களைக் கலந்துகொண்டு கவர்னர் ஜெனரல் அவர்களால் பொறுக்கி எடுக்கப்பட்டு மந்திரிகள் நியமிக்கப்படுவார்கள். (இவ்விதம் கவர்னர் ஜெனரல் அவர்களின் ஆக்ஞா சாசனத்தில் துலக்கப்படும்).

b. அவர்கள் சட்டசபை மெம்பர்களாகயிருக்க வேண்டும். அல்லது நியமித்த ஆறு மாதத்துக்குள் சட்டசபை மெம்பர்களாக ஆகவேண்டும்.

c. அவர்களின் மொத்த எண்ணிக்கை 10 மெம்பர்களுக்கு மேலிருக்கக்கூடாது.

d. அவர்களுடைய சம்பளம், படி முதலியவைகளை இந்திய சட்டசபை ஆக்ட் மூலம் தீர்மானிக்கவேண்டும். அதுவரை கவர்னர் ஜெனரல் அவர்களால் நிர்ணயிக்கப்படும்.

e. ஆக்டில் முதல் மந்திரி விஷயமாக யாதொன்றும் சொல்லாவிட்டாலும், இங்கிலாந்திலும் குடியாசு நாடுகளிலும் இருப்பது போலவும், இந்தியாவிலும் தற்காலத்தில் மாகாணங்களில் நடைபெறும் வழக்கத்தை அனுசரித்தும், சட்டசபையில் மெஜாரிட்டிக் கட்சியின் தலைவரைக்கவர்னர் ஜெனரல் கூப்பிட்டு அவரைப்பிரதம மந்திரியாக்கி, மற்ற மந்திரிகளை அவர் மூலம் பொறுக்கி எடுத்து நியமனம் செய்வார். பிரதமமந்திரி ராஜீநாமாச்செய்தால் மற்றமந்திரிகளும் ராஜிநாமாச்செய்ததாக பாவிக்கப்படுவார்கள்.

f. இந்திய சட்டசபையின் ஒரு பிரிவில், தேர்தல்செய்யப்படாமல் கவர்னர் ஜெனரல் அவர்களால் நியமிக்கப்பட்ட சில மெம்பர்கள் உண்டு என்று நாம் பின்னால் அறிவோம். அப்படி நியமனம் செய்யப்பட்ட மெம்பர்களை மந்திரிகளாக நியமிப்பதில் யாதொரு ஆட்சேபணையுமில்லை.

g. அப்படி மந்திரிகளை நியமிப்பதில் சிறுபான்மைக்கட்சியின ரின் பிரதிநிதிகளையும், இந்திய சமஸ்தானங்களின் பிரதிநிதிகளையும் கூடியமட்டில் கவர்னர்ஜெனரல் அவர்கள் மந்திரி சபையில் சேர்த்துக்கொள்ள ஏற்பாடு செய்யவேண்டும். (இவ்விதம் ஆக்ஞா சாசனத்தில் துலக்கப்படும்).

h. மந்திரிகள் சட்டசபைக்கு ஜவாப்தாரியுள்ளவர்களாகயிருப்பார்கள். அதாவது சட்ட சபையில் மந்திரிகள் பேரில் நம்பிக்கையில்லாத்தீர்மானம் நிறைவேறினால் மந்திரிகள் ராஜிநாமாச்செய்ய வேண்டும். (இவ்விதம் ஆக்டிலாவது ஆக்ஞா சாசனத்திலாவது வியக்தமாகச்சொல்லப்படாவிட்டாலும் இங்கிலாந்திலும் குடியரசு நாடுகளிலும் அமுலிலிருக்கும் வழக்கம் இந்தியாவிலும் அமுலுக்கு வரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது).

28. கவுன்சிலர்களின் நியமனம்.

a. இவர்கள் கவர்னர் ஜெனரல் அவர்களால் நியமிக்கப்படுவார்கள்.

b. இவர்களின் சம்பளம் படி முதலியவை மாக்ஷிமை தங்கிய மன்னர் பிரானின் மந்திராலோசனை சபையார் தீர்மானிப்பார்கள்.

c. கவுன்சிலர்களுக்கு இந்திய சட்ட சபையில் பேச அதிகாரமுண்டு. ஆனால் ஓட் செய்ய அதிகாரமில்லை.

29. பொருள் வரவு சம்பந்தமான விஷயங்களில் கவர்னர் ஜெனரல் அவர்களுக்கு ஆலோசனை சொல்ல, பைனான்ஷியல் அட்வைஸர் (Financial adviser) என்ற பொருளாதாரத்துணைவர் ஒருவரை கவர்னர் ஜெனரல் அவர்கள் நியமித்து அவருடைய சம்பளம், படி முதலியவைகளை நிஷ்கரிஷை செய்யலாம். மந்திரிகளும் வேண்டும் போது பொருளாதார விஷயமாக இவருடன் கலந்துகொள்ளலாம்.

மேலேகண்டபடி ஒரு பொருளாதார அட்வைஸர் கவர்னர் ஜெனரல் அவர்கள் நியமித்தபோதிலும், இந்திய ஐக்கிய கவர்ன்மெண்டின் பொருளாதார சம்பந்தமான எல்லா விஷயங்களும்

பொக்கிஷ மந்திரிவசமே விடப்பட்டு அவராலேயே நிர்வகிக்கப்பட்டு வரப்படும். ஷை பொக்கிஷ மந்திரியின் நிர்வாகத்தில் பொருளாதார அட்வைஸர் சாதாரணமாகத் தலையிடமாட்டார். ஆனால் பொருளாதார மந்திரியின் ஏற்பாடுகள், மந்திரிகளுக்கு மாற்றப்படாத விஷயங்களை பாதிக்கக்கூடியதாக யிருந்தாலும், பொக்கிஷ மந்திரியின் ஏற்பாடுகளினால் இந்தியாவின் பொருளாதார நிலைமைக்கே அபாயம் நேரிட்டுவிடும் என்று பொருளாதாரத்துணைவர் அபிப்பிராயப்பட்டாலும், அந்த விஷயங்களை அவர் உடனே கவர்னர் ஜெனரல் அவர்களுக்குத்தெரிவித்து, அவருக்கு வேண்டிய ஆலோசனை சொல்லி, பொக்கிஷ மந்திரியின் அயுக்தமான காரியங்களைத்தடுப்பதே இவருடைய முக்கியக்கடமை. இது தவிற, மந்திரிகளுக்கு மாற்றப்படாத விஷயங்கள் சம்பந்தமாகப்பொருளாதார யோசனை கவர்னர் ஜெனரல் அவர்களுக்குச் சொல்லவேண்டியதும் இவருடைய பொறுப்பு.

30. இந்திய ஐக்கிய அரசாட்சியில், தற்காலத்தில் மாகாணங்களில் இருப்பதுபோல இரட்டை ஆட்சி ஏற்படுத்தப்பட்டபோதிலும், நிர்வாகம் இரண்டு பிரிவாக நடப்பில் பிரிபடாமல், மந்திரிகள், கவுன்சிலர்கள், கவர்னர்ஜெனரல், எல்லாரும்சேர்ந்தே எல்லா விஷயங்களையும் கலந்து கொள்ளவேண்டும் என்று கவர்னர் ஜெனரல் அவர்களுடைய ஆக்ஞாசாசனத்தில் துலக்கப்படும்.

### 31. ஆக்ஞாசாசனம் (Instrument of Instructions)

இங்கிலாந்தில் குடியரசு ஏற்படுத்தி இப்பொழுது சுமார் 250 வருஷம் ஆகிறது. அதற்குமுன் இங்கிலாந்துதேச அரசர்கள் சுயேச்சாதிகாரிகளாக யிருந்தார்கள். மேலும் ரஷியா, ஜெர்மனி, முதலிய நாடுகளைப் போல திடீரென்று ஒரே நாளில் சுயேச்சாதிகாரம் மாறி, குடியரசு ஏற்படவில்லை. படிக்கிரமமாகவே சுயேச்சாதிகாரம் குடியாட்சியாக மாறிற்று. ஆரம்பம் முதல் இங்கிலாந்து அரசர்களுக்கு ஆலோசனை கூற கவுன்சிலர்கள் இருந்துவந்தபோதிலும், அவர்களுடைய ஆலோசனைப்படி அரசர்கள் நடக்கவேண்டுமென்ற நிர்ப்பந்தம் ஆரம்பத்தில் கிடையாது. பின்னால், சிறுகச்

சிறுகஷ்டி மந்திராலோசனை சபையாரின் நிர்வாகம் அதிகரித்துவந்த துடன், இங்கிலீஷ் காமன்ஸ் (Commons) சபையின் அதிகாரமும் அதிகரித்துவந்தது. நாளடைவில் காமன்ஸ் சபையில் தலைவர்களாக வும் செல்வாக்குள்ளவர்களாகவும் இருப்பவர்களை அரசனுடைய மந்திராலோசனை சபையில் சேர்த்துக்கொள்ளவேண்டிய அவசியம் ஏற்பட்டது. கடைசியாக எல்லா அதிகாரமும் பார்லிமெண்ட் சபைக் குப் பொறுப்புவாய்ந்த மந்திரிகளிடம் வந்தடைந்து மந்திரிகளின் சம்மதமன்னியில் அரசன் எந்தக்காரியமும் செய்யக்கூடாது என்ற மாமூல் ஏற்பட்டுவிட்டது. ஆகையால் இங்கிலாந்தில் எல்லா அதிகாரமும் பேருக்குமட்டும் நமது அரசர் செலுத்துகிறாரே யொழிய நடப்பில் எல்லா அதிகாரமும் பார்லிமெண்ட் சபைக்குப் பொறுப்புவாய்ந்த மந்திரிகளே செலுத்துகிறார்கள். மன்னர்பிரான் பேரால் ஏற்படும் ஒவ்வொரு உத்திரவுக்கும் ஒவ்வொரு நடவடிக்கைக் கும் ஒரு மந்திரி உத்திரவாதமாக யிருக்கவேண்டுமென்ற வழக்கமும் சம்பிரதாயமும் ஏற்பட்டுவிட்டது. கனடா, ஆஸ்ட்ரேலியா முதலிய குடியரசு நாடுகளுக்குப் பொறுப்பாட்சி அளிக்கும் சமயத்தில் பூரணப்பொறுப்பு ஆட்சி உடனே கொடுக்கப்பட்டு விடவில்லை. ஆரம்பத்தில் மன்னர்பிரானுக்குப் பிரதிநிதியாக கவர்னர்ஜெனரல் என்பவர் ஒருவரை நியமித்து எல்லா அதிகாரத்தையும் அவருக்குக் கொடுத்து அவருக்கு ஒரு மந்திரிசபை ஏற்படுத்தி,சில விஷயங்கள் சம்பந்தமாக மட்டும் ஷை மந்திரிசபையின் ஆலோசனையைக்கேட்டு நடக்கவேண்டுமென்றும் மற்றவிஷயங்கள் சம்பந்தமாக கவர்னர் ஜெனரல் அவர்கள் தன்யுக்தம்போல் நடக்கலாம் என்றும் திட்டப் படுத்தினார்கள். பின்னால், படிக்கிரமமாக குடியாட்சி ஸ்தாபனங்கள் விருத்தியாகி,பொறுப்பாட்சியை நிர்வகித்து நடத்த ஷை நாடுகளுக்கு சக்தி அதிகரிக்க அதிகரிக்க, மந்திரிகளின் ஆலோசனைப்படி கவர்னர் ஜெனரல் நடக்கவேண்டிய விஷயங்களையும் விஸ்தரித்துக்கடைசியாக எல்லாவிஷயங்களையும் மந்திரிகளின் ஆலோசனைக்கிணங்கியே கவர்னர்ஜெனரல் நடத்தவேண்டும் என்றும், தன்யுக்தம்போல நடத்தக்கூடாதென்றும் வழக்கம் அமுலுக்குக்கொண்டுவரப்பட்டது. இவ்விதம் கவர்னர்ஜெனரல் என்ன என்ன விஷயங்களில் மந்திரிகளின் ஆலோசனையைக் கேட்கவேண்டும் என்றும்,

மந்திரிகளிடம் எவ்விதம் நடந்துகொள்ள வேண்டுமென்றும் கண்டு ஒவ்வொரு கவர்னர்ஜெனராலுக்கும் ஒவ்வொரு கவர்னருக்கும் மன்னர்பிரானிடமிருந்து அந்தந்த தேசங்களின் அந்தந்தக் காலத்திய அபிவிருத்திக்குத்தக்கபடி ஷரத்துக்கள் கண்டு ஒரு ஆக்ஞா சாசனம் கொடுப்பது என்ற வழக்கம் ஏற்பட்டிருக்கிறது. தற்காலமும் இந்தியாவின் கவர்னர்ஜெனரல் அவர்களுக்கும் எல்லா மாகாண கவர்னர்களுக்கும் ஒரு ஆக்ஞா சாசனம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்திய ஐக்கிய அரசாட்சி ஸ்தாபனமானவுடன் இந்தியாவுக்கு நியமிக்கப்படும் கவர்னர்ஜெனரல் அவர்களின் ஆக்ஞாசாசனத்திலும் மாகாணங்களுக்கு நியமிக்கப்படும் கவர்னர் அவர்களின் ஆக்ஞாசாசனத்திலும் இன்ன இன்ன விஷயங்கள் நுலக்கப்படும் என்பதைப் பின்னால் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

33. மேலே 25, 26 பாராக்களில் கண்டபடி சில விஷயங்களைத் தவிற மற்ற எல்லா விஷயங்களையும் மந்திரிகளின் நிர்வாகத்துக்கு ஒப்புவித்து விட்டபோதிலும் மந்திரிகளுக்குப்பொறுப்பாட்சி அனுபவம் அதிகம் இல்லாததாலும், சுய ஆட்சி ஸ்தாபனத்துக்கு அத்தியாவசியமான சில அம்சங்கள் இந்தியாவில் இல்லாததாலும், மந்திரிகள் தங்கள் அறியாமையாலும், அனுபவக்குறைவாலும் தவறுதல்கள் செய்யும்பக்ஷத்தில் அவைகளைத் திருத்துவதற்காக மந்திரிகளின் நிர்வாகத்துக்கு விடப்பட்டிருக்கும் விஷயங்களிற்கூட கவர்னர் ஜெனரல் அவர்களுக்குச்சில 'விசேஷப் பொறுப்புகள்' (Special responsibilities) என்ற அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவையாவன:—

a. இந்தியாவிலோ, அதின் ஓர் பாகத்திலோ சாந்தத்திற்கும் அமைதிக்கும் பங்கம் வாராமல் பாதுகாத்தல்.

b இந்திய ஐக்கிய அரசாட்சியின் பொருளாதார நிலமையின் உறுதிப்பாட்டையும், இந்தியாவின் நாணயத்தையும் (கண்ணியத்தையும்) பாதுகாத்தல்.

c. சிறுபான்மைக் கக்ஷியினரின் நியாயமான அக்கரைகளைப் பாதுகாத்தல்.

d. சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், அவர்கள் குடும்பத்தினர்கள், இவர்களுக்குச் சட்டப்படிக் கிடைக்கவேண்டிய உரிமைகளைக்கிடைக்கச்செய்தல்; அவைகளைப்பாதுகாத்தல்.

e. வியாபார சம்பந்தமாக எந்த எந்த விஷயங்களில் பேதங் காட்டுவதான (விவேசனம் செய்வதான) சட்டங்கள் ஏற்படுத்தக் கூடாது என்று பின்னல் சொல்லப்பட்டிருக்கிறதோ, அந்த விஷயங்கள் சம்பந்தமாக நிர்வாக முறையில் உத்திரவுகள் பிறப்பிவிக்காமலிருக்கும்படிச்செய்தல். (14 வது அத்தியாயத்தைப் பார்க்கவும்.)

f. இங்கிலாந்திலிருந்தும், பர்மாவிலிருந்தும் வரும் இறக்குமதி சாமான்கள் சம்பந்தமாக பேதங்காட்டக்கூடிய அல்லது தண்டம் விதிக்கக்கூடிய நடவடிக்கைகள் எடுக்கப்படாமல் தடுத்தல்.

g. இந்திய சமஸ்தானங்கள் சம்பந்தமான அக்கரைகளைப்பாதுகாத்தல்.

h. எந்த எந்த விஷயங்களில் கவர்னர்ஜெனரல் அவர்கள் மந்திரிகளைக் கலக்காமலும், அல்லது மந்திரிகளைக் கலந்தாலும் தன்யுக்தம்போல் நடக்கவேண்டுமென்றும் ஆக்டில் சொல்லப்பட்டிருக்கிறதோ, அந்த விஷயங்களை அவ்விதம் நிர்வகிப்பதில் மற்ற விஷயங்களின் நிர்வாகத்தினுல் ஏதாவது நிர்ப்பந்தம் நேரிடுமானுல் அந்த நிர்ப்பந்தத்தை நீக்குதல்.

34. ஷை விசேஷப்பொறுப்புகள் கவர்னர்ஜெனரல் அவர்களுக்குக் கொடுத்திருப்பதிலிருந்து ஷை விஷயங்கள் சம்பந்தமாக மந்திரிகளின் பொறுப்பு எடுக்கப்பட்டுவிட்டது என்று எண்ணிக் கொள்ளக்கூடாது. மந்திரிகளின் நிர்வாகத்திற்கு எந்தெந்த விஷயங்கள் விடப்பட்டிருக்கிறது என்று நாம் ஏற்கனவே சொல்லியிருக்கிருேமோ, அந்தவிஷயங்களை நிர்வகிக்கும்பொறுப்பு மந்திரிகளைச் சேர்ந்ததே கவர்னர்ஜெனரல் அவர்களுக்கு விசேஷப்பொறுப்புகள் கொடுக்கப்பட்டிருப்பதிலிருந்து என்ன ஏற்படுகிறதென்ருல், ஷை விசேஷப்பொறுப்புகள் கொடுக்கப்பட்டிருக்கும் விஷயங்கள் சம்பந்தமாக மந்திரிகளின் தீர்மானம் அல்லது பிரஸ்தாபனை சரியல்ல என்று கவர்னர்ஜெனரல் அவர்களுக்குப்புலப்பட்டால் ஷை தீர்மா

னம் அல்லது பிரஸ்தாபனைக்கு மாறாக நடக்க கவர்னர்ஜெனரல் அவர்களுக்கு அதிகாரமுண்டு. இவ்விதம் கவர்னர்ஜெனரல் அவர்களும், மந்திரிகளும் அடிக்கடி ஒருவர்க்கொருவர் சண்டைபோட்டுக்கொள்ளவேண்டிய சந்தர்ப்பங்கள் ஏற்படாதென்றும், கவர்னர் ஜெனரல் அவர்களும் மந்திரிகளும் எல்லா விஷயங்களிலும் கலந்து அபிப்பிராய பேதமில்லாமலேயே எல்லா விஷயங்களும் நிர்வகிக்கப் படும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

35. புதிய அரசியல் திட்டத்தில் இன்ன இன்ன விஷயங்களில் மந்திரிகளைக்கலக்காமலேயே கவர்னர்ஜெனரல் அவர்கள் தீர் மானம் செய்யலாம் என்ற விஷயங்களில் முக்கியமானவைகளை நாம் கோர்வையாக இங்கே குறிப்பிடுவோம்:—

1. மந்திரிகளைப்பொறுக்கி எடுத்து ஆரம்பத்தில் அவர்களின் சம்பளம் நிர்ணயித்தல்.

2. மந்திரிகளுக்கு மாற்றப்படாத விஷயங்களை நிர்வகித்தல். அதாவது ராணுவம் வெளிநாட்டு வியவகாரங்கள் முதலியன. (25-வது பாராவைப்பார்க்கவும்)

3. பொருளாதார அட்வைஸர், இந்தியாவின் அட்வகேட் ஜெனரல், இவர்களின் நியமுகம், சம்பள நிர்ணயம்.

4. ஐக்கிய அரசாட்சியின் நிர்வாக சம்பந்தமாக விதிகள் ஏற் படுத்துதல், மந்திரிகளுக்கு இலாகாக்கள் பிரித்துக்கொடுத்தல்.

5. சட்டசபைகளைக் கூட்டுவித்தல், கலைத்தல்.

6. மசோதாக்களை ஆமோதித்துச்சட்டமாக்குதல்.

7. சட்டசபையில் சில விஷயங்கள் சம்பந்தமாக பிரேரேபணை செய்ய அனுமதிகொடுத்தல்.

8. சட்டசபை சம்மதமன்னியில் கவர்னர்ஜெனரலின் ஆக்டு கள் என்ற ஆக்டுகள் வெளியிடுதல்.

9. புதிய அரசியல் திட்டம் நடைபெறாமல் பங்கமாகிவிட்டால் (break down), பூரா அரசியலையும் தானே நிர்வகிக்கப்போவதாக அறிக்கை பகிரங்கப்படுத்துதல்.

10. பிரிட்டிஷ் பலுசிஸ்டான் மாகாணத்தைக்கமிஷனர் மூலம் நிர்வகித்தல்.

11. ஐக்கியசட்டசபைக்கும், மாகாணசட்டசபைக்கும் வியக்தமாகப் பங்கிட்டுக்கொடுக்கப்பட்டிருக்கும் விஷயங்கள் தவிற மீதி விஷயங்கள் சம்பந்தமாகச் சட்டங்கள் ஏற்படுத்துவது மாகாண சபையைச்சேர்ந்ததா அல்லது ஐக்கிய சபையைச்சேர்ந்ததா என்று தீர்மானம் செய்தல்.

12. சில மசோதாக்களைச் சட்டசபையில் கொண்டுவருவதற்கு முன் அனுமதி கொடுத்தல்.

13. ஐக்கியசட்டசபையில் இந்திய சமஸ்தானங்களையும் கட்டுப்படுத்தத்தக்கதாக வெளியிடப்பட்ட ஆக்டுகளை ஷை சமஸ்தானங்களில் அமுலுக்குக்கொண்டுவருதல்.

14. மாகாணங்களுக்கு வருமானவரியில் ஒரு பாகம் பங்கிட்டுக் கொடுத்தல்.

15. இந்தியன் ரிசர்வ்பாங்கியின் கவர்னர், இரண்டு டிப்டி—கவர்னர்கள், 4 டைரெக்டர்கள், இவர்களை நியமுகம் செய்தல், ரிசர்வ் பாங்கியின் ஸென்ட்ரல் போர்டை விலக்குதல், ரிசர்வ் பாங்கியை முடிவுசெய்தல்.

16. ஐக்கிய கவர்ன்மெண்டுக்கும் மாகாண கவர்ன்மெண்டுகளுக்கும் ஏற்படும் விவாதங்களைப் பைசல் செய்தல்.

17. சீமையில் இந்தியா சம்பந்தமாகச் சிலவு செய்யப்படும் தொகை சம்பந்தமான கணக்குகளைப் பரிசீலனை செய்ய ஆடிட்டர் நியமித்தல்.

18. புதிய ரெயில்வே போர்டில் (Railway Authority) சில மெம்பர்கள் நியமுகம் செய்தல்.

19. புதிய ரெயில்வே போர்டுக்கும், இந்திய சமஸ்தானங்களுக்கும் ஏற்படும் விவாதங்களைப்பைசல் செய்ய ஏற்படுத்தப்படும் கோர்ட்டுக்குச் சில மெம்பர்கள் நியமுகம்செய்தல், ஐக்கிய (Federal) ஹைகோர்ட்டுக்கு ஆக்டிங் சீப் ஜஸ்டிஸ் நியமுகம்செய்தல்.

20. ஐக்கிய (Federal) ஹைக்கோர்ட்டு சம்பந்தமாக ஏற்படுத்தப்பட்ட விதிகளை ஆமோதித்தல்,

21. சட்டசம்பந்தமான விஷயங்களைப் பொறுத்து ஐக்கிய (Federal) ஹைக்கோர்ட்டின் அபிப்பிராயம் கோறுதல்.

22. கவுன்ஸில் ஆப் ஸ்டேட்டுக்கு 6 மெம்பர்கள் நியமனம் செய்தல்.

23. இன்னும் சில சில்லறை அதிகாரங்கள்.

36. கவர்னர்ஜெனரல் அவர்கள் மந்திரிகளைக்கலந்தபோதிலும் அவர்கள் அபிப்பிராயத்துக்கு மாறுகத் தன் அபிப்பிராயம்போல இன்ன இன்ன காரியங்களில் நடக்கலாம் என்ற விஷயங்களில் முக்கியமானவைகளை நாம் கோர்வையாகக்குறிப்பிடுவோம் —

1. கவர்னர்ஜெனரல் அவர்களுக்கு என்ன என்ன விஷயங்களில் விசேஷப்பொறுப்புகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனவோ அந்த விஷயங்கள் சம்பந்தமாக எடுத்துக்கொள்ளும் நடவடிக்கைகள்.

2. புதிய ரெயில்வே போர்ட்டுக்குச்சில விஷயங்களில் உத்திரவிடுதல், ஷை போர்டு அதிகாரிகள் மந்திரிகளிடம் நடந்துகொள்ளவேண்டிய விஷயமாக விதிகள் ஏற்படுத்துதல்.

3. சில பெரிய உத்தியோகங்களுக்கு ஆபீஸர்கள் நியமித்தல்.

4. இந்தியா செக்ரடரி அவர்களால் நியமுகம் செய்யப்பட்ட உத்தியோகஸ்தர்களைத் தண்டித்தல்.

5, ரெயில்வே சீப் கமிஷனரை (முக்கிய நிர்வாகத்தலைவர்) நியமித்தல்.

6. ரெயில்வே போர்ட் மெம்பர்களை வேலையிலிருந்து நீக்குதல்.

7. இங்கிலாந்தில் இந்தியாவின் ஹை கமிஷனர் என்ற பிரதிநிதி நியமித்தல்.

37. கவர்னர்ஜெனரல் அவர்களுக்கு இந்திய சட்டசபை சம்பந்தமாக அடியிற்கண்ட அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன:—

a. சட்டசபை சம்மதமன்னியில், கவர்னர்ஜெனரலின் ஆக்ட் என்று பெயர் கொண்ட ஆக்டுகள் வெளியிடுதல்.

இந்த ஆக்டுகள் மூன்று சந்தர்ப்பங்களில் ஏற்படுத்தப்படலாம். முதலாவது, கவர்னர் ஜெனரல் அவர்களிடம் எந்த விஷயங்கள் சம்பந்தமாக விசேஷப் பொறுப்புகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனவோ அந்த விஷயங்களை நிர்வகிக்க கவர்னர் ஜெனரல் ஒரு சட்டம் தேவையென்று அபிப்பிராயப்பட்டு அதற்கு மந்திரிகள் ஒத்துக்கொள்ளாமலிருக்கும் சந்தர்ப்பம். இரண்டாவது, மந்திரிகளும் கவர்னர் ஜெனரல் அவர்களும் அவசியம் என்று கருதும் சட்டம் ஒன்றை சட்டசபை மெம்பர்கள் பாஸ்செய்ய மறுத்தல். மூன்றாவது, கவர்னர் ஜெனரல் அவசியம் என்று அபிப்பிராயப்படும் வரி விஷயமான சட்டங்கள் அல்லது செலவு திட்டம் இவைகளுக்கு சட்டசபை சம்மதிக்காதிருத்தல்.

மேற்படி கவர்னர் ஜெனரலின் ஆக்டுகள் வெளியிடுவதற்கு முன், சட்டசபைக்குத் தான் அவ்விதம் ஆக்ட் வெளியிட உத்தேசித்திருப்பதாகத் தெரிவிக்கவேண்டும். அவசரமான சந்தர்ப்பங்களில் அந்த நோட்டீசும் அவசியமில்லை.

b. சட்டசபையில் ஏற்கனவே பிரவேசனம் செய்யப்பட்ட, அல்லது பிரவேசனம் செய்யப்படும், மசோதாக்கள் சம்பந்தமாக ஏதாவது ஒரு அம்சம் அல்லது திருத்தப் பிரேரபணை இந்தியா அல்லது அதின் ஒரு பாகத்தினுடைய சாந்தத்தையும் அமைதியையும் பாதிக்கக்கூடியதாகவோ, அல்லது தன் விசேஷப்பொறுப்புகளைப் பாதிக்கக்கூடியதாகவோ இருக்கிறதென்று அபிப்பிராயப்படும்பக்ஷத்தில், அந்த அம்சம் அல்லது பிரேரபணையைப்பற்றி விவாதம்செய்யக் கூடாது என்று கவர்னர்ஜெனரல் தடுத்துவிடலாம்.

c. சட்டசபைகளில் சட்டசபைத்தலைவரைக் கலந்துகொண்டு நடவடிக்கைகள் நடத்தும் முறையைப்பற்றி விதிகள் ஏற்படுத்த கவர்னர் ஜெனரல் அவர்களுக்கு அதிகாரமுண்டு.

38. கவர்னர் ஜெனரல் அவர்கள் அவசரச்சட்டங்கள் (ordinances) ஏற்படுத்தலாம்.

39. சட்ட சபைகளால் பாஸ் செய்யப்பட்ட மசோதாக்களுக்குச் சம்மதம் கொடுத்து அதைச் சட்டமாக்கவோ, அல்லது சம்மதம் கொடுக்க மறுக்கவோ அல்லது, மன்னர்பிரானின் திருவுளம் எப்படியோ அவ்விதம் நடப்பதற்காக நிறுத்திவைக்கவோ, கவர்னர் ஜெனரல் அவர்களுக்கு அதிகாரம் உண்டு.

40. எந்தெந்த விஷயங்களில் மந்திரிகளின் ஆலோசனையைக் கேட்காமலோ, அல்லது அவர்களின் அபிப்பிராயத்துக்கு மாருகவோ, கவர்னர்ஜெனரல் அவர்கள் நடக்கிருரோ, அவைகள் சம்பந்தப்பட்டமட்டில் இந்தியா செக்ரடரியின் உத்திரவுக்கும் அவர் மூலமாக பார்லிமெண்டுக்கும் பிரிட்டிஷ் கவர்மெண்டாருக்கும், கவர்னர்ஜெனரல் கீழ்ப்படிந்து நடக்கக்கட்டுப்பட்டவர்.

## அத்தியாயம் 8.

### ஐக்கிய (**Federal**) சட்டசபை.

41. ஐக்கிய சட்டசபை இரண்டு சாசன சாலையுடன் கூடியது. ஒன்றிற்கு ஹவுஸ் ஆப் அஸெம்பிளி (House of Assembly) என்றும், மற்றென்றிற்குக் கவுன்ஸில் ஆப் ஸ்டேட் (Council of State) என்றும் பெயர். ஒரு மசோதா சட்டம் ஆக வேண்டுமானுல் அது ஷ இரண்டு சாசன சாலையிலும் தீர்மானம் ஆகி நமது மன்னர் அவர்களுக்காக கவர்னர் ஜெனரல் அவர்களால் சம்மதிக்கப்படவேண்டும்.

42. கவுன்ஸில் ஆப் ஸ்டேட்.

இதற்கு மொத்தம் 260 மெம்பர்கள். அதில் 150 மெம்பர்கள் பிரிட்டிஷ் இந்தியாவில் ஓட்டர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள்; கவர்னர்ஜெனரல் அவர்களால் நியமிக்கப்பட்டவர்கள் 6 மெம்பர்கள். பாக்கி 104 மெம்பர்கள் இந்தியசமஸ்தாஞதிபதிகளால் நியமிக்கப்பட்ட பிரதிநிதிகள். தேர்ந்தெடுக்கப்பட்ட 150 மெம்பர்களில் மதருஸ் மாகாணத்துப் பிரதிநிதிகள் 20 மெம்பர்கள்; மற்றமாகாணத்துப் பிரதிநிதிகள் 130 மெம்பர்கள்; மதருஸ் மாகாணத்திய 20 மெம்பர்களும், ஓட்டர்களால் நேராகத்தேர்ந்தெடுக்கப்படுவார்கள். முதற் தேர்தலில் 10 மெம்பர்கள் 6 வருஷத்துக்கும், மற்ற 10 மெம்பர்கள் 9 வருஷத்துக்கும் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பிந்திய தேர்தல்களில் 9 வருஷத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இதே மாதிரி மற்ற

மாகாணங்களிலும் மெம்பர்களில் சிலர் 3 வருஷத்துக்கும், சிலர் 6 வருஷத்துக்கும், சிலர் 9 வருஷத்துக்கும் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். கவர்னர்ஜெனரல் அவர்களால் நியமிக்கப்படும் 6 மெம்பர்களில் 2 மெம்பர்கள் 3 வருஷத்துக்கும், 2 மெம்பர்கள் 6 வருஷத்துக்கும் 2 மெம்பர்கள் 9 வருஷத்துக்கும் நியமிக்கப்படுவார்கள். இவ்விதமே இந்திய சமஸ்தானப் பிரதிநிதிகளும் நியமிக்கப்படுவார்கள். மேலே கண்ட ஏற்பாட்டின்படி ஏககாலத்தில் எல்லா மெம்பர்களுடைய கால அளவுமுடிவு பெறாமல் மூன்று வருஷத்துக்கொருதரம் $\frac{1}{3}$ மெம்பர்கள் புதிப்பிக்கப்பட்டு, கவுன்ஸில் ஆப் ஸ்டேட் ஒரு நாளும் கலையாமல் சாஸ்வதமாயிருக்கும்.

மற்ற விபரங்கள் இரண்டாவது பாகத்தில் 1-வது அனுபந்தத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன.

43. ஹவுஸ் ஆப் அஸெம்பிளி

இதற்கு மொத்தம் 375 மெம்பர்கள். இவர்கள் ஐந்துவருஷம் மெம்பர்ஸ்தானம் வகிப்பார்கள். அதில் பிரிட்டிஷ் இந்தியாவின் பிரதிநிதிகள் 250 மெம்பர்கள். இந்திய சமஸ்தானங்களின் பிரதிநிதிகள் 125 மெம்பர்கள். ஷை 250 மெம்பர்களில் மதறாஸ் ராஜதானியின் பிரதிநிதிகள் மொத்தம் 37 மெம்பர்கள். ஷை 37 ஸ்தானங்களும் வகுப்புவாரியாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஷை விபரத்துக்கும் அவர்களின் தேர்தல் சம்பந்தமான மற்றவிபரங்களுக்கும் 1-வது அனுபந்தத்தைப் பார்க்கவும். சமஸ்தானப் பிரதிநிதிகள் சம்பந்தமான விஷயங்களும், முக்கியமாக நமது ராஜதானிக்குள்ளிருக்கும் மைசூர், திருவாங்கூர், கொச்சி, புதுக்கோட்டை, பங்கனபள்ளி, சாண்டூர் சமஸ்தானங்கள் சம்பந்தமான விஷயங்களையும் இதின் 1-வது அனுபந்தத்தில் விவரமாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

44. (a) மேற்படி இரண்டு சபைகளுக்கும் அக்கிராசனுதிபதியும் உப அக்கிராசனுதிபதியும் அந்தந்த சபையால் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். ஒவ்வொரு சபையும் காரியம் நடத்துவதற்கு (quorum) சபையின் மொத்த மெம்பர்களில் குறைந்தது $\frac{1}{6}$ பங்கு மெம்பர்களாவது ஆஜராகயிருக்கவேண்டும்.

ஒரு மெம்பர் சபை கூடும்போது டி சபையின் அனுமதியில்லாமல் 60 நாள் ஆஜராகாமலிருந்தால் அவரை மெம்பர் ஸ்தானத்தைவிட்டு டி சபை நீக்கலாம்.

(b) மெம்பர்களுடைய சம்பளம், படி முதலியவைகளை அந்தந்த சபை ஆக்டு மூலம் தீர்மானம் செய்து கொள்ளவேண்டும்.

(c) டி இரண்டு சபைகளுக்கும் சமமான அதிகாரம் உண்டு. ஆனால் வரி விதிக்கும் மசோதாக்களை அஸெம்பிளியில் தான் பிரவேசனம் செய்யவேண்டும்.

45. டி இரண்டு சபைகளுக்குள் அபிப்பிராயபேதம் ஏற்பட்டால் கவர்னர்ஜெனரல் அவர்கள் ஜாயிண்டு சபை கூட்டவேண்டும். அதில் மெஜாரிட்டியால் தீர்மானிக்கப்பட்ட விஷயங்கள் இரண்டு சபையாலும் தனித் தனியாக பாஸ் செய்யப்பட்டதாகக் கருதப்படும்.

ஐக்கிய சட்டசபை சம்பந்தமான மற்ற விதிகள் மாகாணசட்டசபை விதிகளுக்கு அனுரூபமாக (ஒரே மாதிரியாக) இருக்கிறபடியாலும், மாகாண சட்டசபை விதிகள் விவரமாகப்பின் அத்தியாயங்களில் சொல்லப்பட்டிருப்பதாலும், அவைகளை இங்கே விரிவாகச் சொல்லவில்லை.

46. அடியிற்கண்ட விஷயங்களைப்பற்றி ஐக்கிய சட்டசபைக்கு ஓட் (vote) செய்ய அதிகாரமில்லை. அதாவது மேற்படி விஷயங்கள் சம்பந்தமாக ஏற்படும் செலவுகள் எல்லாம் சட்டசபை அதிகாரமில்லாமலேயே செலவிட கவர்னர் ஜெனரல் அனுமதிகொடுக்கலாம்:-

கடன் துகைகளுக்கு வட்டி; கவர்னர்ஜெனரல், மந்திரிகள், கவுன்செலர்கள், பொருளாதார அட்வைஸர், சீப் கமிஷனர், இவர்களுடைய சம்பளம் படி முதலியவைகள்; ஐக்கிய ஹைகோர்ட் ஜட்ஜ்களின் சம்பளம், படி, பென்ஷன்; மந்திரிகளுக்கு மாற்றப்படாத இலாகாக்களின் சம்பந்தமான செலவுகள்; இந்தியா செக்ரடெரி அவர்களால் நியமிக்கப்படும் உத்தியோகஸ்தர்களின் சம்பளம்,

படி, பென்ஷன்; கவர்னர்ஜெனரல் அவர்கள் யுக்தப்படி நடக்க வேண்டிய விஷயங்கள் சம்பந்தமாக ஏற்படும் செலவுகள்; இன்னும் சில சில்லரை ஐட்டங்கள்.

47. மேலேகண்ட சிலவு ஐட்டங்கள் இந்தியா கவர்ன்மெண்டாரின் மொத்தச்செலவில் சுமார் முக்கால் பாகத்துக்கு மேலாகவே ஆகும். பாக்கி சுமார் கால்பங்கு சிலவு தொகை சம்பந்தமாகத்தான் இந்திய சட்டசபையின் சம்மதம் கேட்டுச் செலவிட வேண்டும்.

# அத்தியாயம் 9

சென்னை ராஜதானியின் நிர்வாக விபரம்.

48. நமது ராஜதானியின் நிர்வாகத்தை நமது சக்கிரவர்த்தி அவர்களால் நியமிக்கப்பட்ட கவர்னர் அவர்கள் நேரிலும் தனக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் ஆபீஸர்கள் மூலமும் நடத்தி வருவார்.

எல்லா உத்திரவுகளும் கவர்னர் அவர்கள் பேரால் பிறப்பிவிக்கப்படும்.

49. மாகாண கவர்ன்மெண்டுக்குச் சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களும் மந்திரிகள் வசம் விடப்பட்டு அவைகளை மந்திரி சபையின் உதவியைக்கொண்டு கவர்னர் அவர்கள் நிர்வகித்து வருவார். ஆனால் கவர்னர்ஜெனரல் அவர்கள்சம்பந்தமாக ஏற்படுத்தியிருக்கிறது போலவே கவர்னர் அவர்களும் சில விஷயங்களை மந்திரிகளைக் கலக்காமலும், சில விஷயங்களை மந்திரிகளின் அபிப்பிராயத்துக்கு மாறாகவும் நடத்த அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் முக்கியமானவைகளை நாம் இங்கே கோர்வையாகக் கூறுவோம்.

I. மந்திரிகளைக் கலக்காமல் கவர்னர் நடத்தக்கூடிய விஷயங்கள்:—

a. மந்திரிகளைப் பொறுக்கி நியமுகம் செய்தல்; மந்திரிகளின் சபையின் அக்கிராசனம் வகித்தல்.

b. சதியாலோசனை, பலவந்தக் குற்றம் முதலியவைகள் மூலமாக தேசத்தின் அமைதிக்குச்சலனம் ஏற்படாமலிருக்கும் பொருட்டு

மந்திரிகளிடமிருந்து அதிகாரத்தையெடுத்துத் தன்னிடம் வைத்துக் கொள்ளல்; வெடி குற்றங்கள் சம்பந்தமாக இரகசிய போலீஸ் உத்தியோகஸ்தர்கள் செய்திருக்கும் ரிப்போர்ட்டுகளை இன்னாருக்குமட்டும் காண்பிக்கலாம் என்று விதிகள் (rules) ஏற்படுத்துதல்.

c. சட்டசபையில் பிரசங்கம் செய்தல், சட்டசபையைக்கூட்டுதல், கலைத்தல்,சட்டசபைக்குச் செய்தி அனுப்புதல்.

d. மசோதாக்களுக்கு சம்மதி கொடுத்தல், அல்லது மறுத்தல் அல்லது கவர்னர் ஜெனரல் தீர்மானத்திற்கு நிறுத்திவைத்தல்.

e. அவசரச் சட்டங்கள் வெளியிடுதல்.

f. சட்டசபைகள் சம்மதமில்லாமல் ஆக்டுகள் வெளியிடுதல்.

g. அரசியல் திட்டம் சரியாக நடைபெறாமல் முறிந்துவிட்டால் அரசியலைத்தான் வகிக்கப்போவதாக அறிக்கை பகிரங்கப்படுத்துதல்.

II. மந்திரிகளைக் கலந்தபின் தன் யுக்தம்போல் நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளக்கூடிய விஷயங்கள்:—

1. கவர்னர் அவர்களுடைய விசேஷப் பொறுப்புகள் சம்பந்தமாக நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளுதல்.

2. மாகாண அட்வகேட் ஜெனரல் (சர்க்காரின் பிரதம வக்கீல்) நியமித்தல், அவருடைய சம்பளம் தீர்மானம் செய்தல்.

3. போலீஸ் நூல்களை மாற்றுதல், சீர்திருத்தம் செய்தல், ஏற்படுத்துதல்.

4. கவர்ன்மெண்டில் வேலை நடத்தும்முறை சம்பந்தமாக விதிகள் ஏற்படுத்துதல்.

50. மந்திரிகளின் நியமனம்.

a. சென்னை சட்டசபைகளில் மெஜாரிட்டிக் கக்ஷியின் தலைவரைக்கலந்து கொண்டு கவர்னர் அவர்கள் மந்திரிகளைப் பொறுக்கி எடுக்கவேண்டும். (இவ்விதம் கவர்னரின் ஆக்ஞா சாசனத்தில் நூலங்கப்படும்.)

b. அவர்கள் சட்டசபை மெம்பர்களாகயிருக்க வேண்டும் அல்லது ஆறுமாதத்திற்குள் சட்டசபைமெம்பர்களாக ஆகவேண்டும்.

(c) அவர்களின் மொத்தம் எண்ணிக்கை இவ்வளவுதான் இருக்கவேண்டும் என்று வரையறை செய்யப்படவில்லை. ஆனால் சென்னைக்கு 8 மெம்பர்கள் நியமிக்கப்படலாம்.

(d) மந்திரிகளுடைய சம்பளம், படி முதலியவைகளைச் சென்னைசட்டசபை தீர்மானித்துக்கொள்ளவேண்டும். அப்படித் தீர்மானம் ஆகும்வரை கவர்னர் அவர்களால் அவை நிர்ணயிக்கப் படும்.

(e) ஆக்டில் முதல் மந்திரி என்றும், மற்ற மந்திரிகள் என்றும் யாதொன்றும் குறிப்பிடாவிட்டாலும் குடியரசு நாடுகளில் ஏற்பட்டிருக்கும் வழக்கத்தை அனுசரித்தும், நம் மாகாணத்தில் தற்காலத்திலிருக்கும் வழக்கத்தை அனுசரித்தும், சட்டசபையில் மெஜாரிடிக் கட்சியின் தலைவரை கவர்னர் அவர்கள் அழைத்து அவரைப் பிரதம மந்திரியாக நியமித்து, மற்றமந்திரிகளை அவர் மூலம் பொறுக்கி எடுத்து நியமுகம் செய்வார். பிரதம மந்திரி ராஜீநாமாச்செய்தால் மற்ற மந்திரிகளும் ராஜீநாமாச் செய்ததாகக்கருதப்படும்.

(f) அப்படி மந்திரிகளை நியமிப்பதில் சிறுபான்மைக் சக்ஷியினரின் பிரதிநிதிகளையும் மந்திரிசபையில் சேர்த்துக் கொள்ள கவர்னர் அவர்கள் ஏற்பாடுசெய்யவேண்டும். அத்தகைய பொறுப்பு மன்னர்பிரானிடமிருந்து கவர்னர் அவர்களுக்குக் கொடுக்கும் ஆக்ஞாசாசனத்தில் வியக்தமாகத் தூலக்கப்படும்.

(g) மந்திரிகள் சட்டசபைக்கு ஜவாப்தாரிகளாக இருப்பார்கள். அதாவது சட்டசபையில் மந்திரிகள்பேரில் நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேறினால் மந்திரிகள் ராஜீநாமாச்செய்யவேண்டும் என்று இங்கிலாந்திலும் குடியரசு நாடுகளிலும் ஏற்படுத்தப்பட்டிருக்கும் வழக்கம் இந்தியாவிலும் ஏற்படுத்தப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

51. நமது மாகாணத்துக்குச் சட்டசபை இரண்டு பிரிவாகப் பிரிக்கப்பட்டு, ஒன்றுக்கு லெஜிஸ்லேடிவ் அசெம்பிளி என்றும் மற்றொன்றுக்கு லெஜிஸ்லேடிவ் கவுன்ஸில் என்றும் பெயர் ஏற்பட்டிருக்கிறது. இவ்விரண்டு பிரிவு சபைகளில், எந்த சபையின்

நம்பிக்கையின் பேரில் மந்திரிகள் காரியங்கள் நிர்வகிக்கவேண்டும் என்ற பிரச்னே ஏற்படலாம். உதாரணமாக எல்லாக்குடியரசு நாடுகளிலும், எந்தசபை சர்வஜன பிரியமானதோ,எந்தசபை சாதாரணப் பொது ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறதோ, அந்த சபையின் ஆதரவின்பேரில் மந்திரிகள் உத்தியோகம் நிர்வகிக்கிறார்கள். நமது மாகாணத்தில் லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளி சுமார் எழுபதுலக்ஷம் ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்படும் சபை. 215 மெம்பர்கள் அடங்கியது. லெஜிஸ்லேடிவ் கவுன்ஸிலோ என்றால் உயர்ந்த யோக்கியதாம்சம் உள்ள சுமார் 26000 ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு, 54 அல்லது 56 மெம்பர்கள் அடங்கியது. இவை இரண்டில், லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளியே சர்வஜனபிரியமானது. அந்த சபை எவர்கள்பேரில் நம்பிக்கைகொள்கிறதோ அவர்கள்தான் மந்திரிகளாக இருக்கமுடியும். ஆயினும் லெஜிஸ்லேடிவ் கவுன்ஸிலில் அங்கத்தினர்களாகயிருப்பவர்களில் ஒன்று அல்லது இரண்டு மெம்பர்கள் மந்திரிசபையில் சேர்க்கப்படுவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

52. கவர்னர் ஜெனரல் அவர்களுக்கு ஏற்படுத்தியிருக்கிறபடியே கவர்னர் அவர்களுக்கும் விசேஷப்பொறுப்புகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவையாவன:—

(a) மாகாணத்திலோ அல்லது அதில் ஓர் பாகத்திலோ அமைதிக்கும் சாந்தத்திற்கும் பங்கம் வராமல் பாதுகாத்தல்.

(b) சிறுபான்மைக் கக்ஷியார்களின் நியாயமான அக்கரைகளைப் பாதுகாத்தல்.

(c) சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், அவர்கள் குடும்பத்தினர்கள் இவர்களுக்குச் சட்டப்படிக்கிடைக்கவேண்டிய உரிமைகளைக்கிடைக்கச்செய்தல்; அவைகளைப்பாதுகாத்தல்.

(d) வியாபாரசம்பந்தமாக பேதங்காட்டுவதைத்தடுத்தல்.

(e) மாகாணத்தில் சீர் திருத்தங்கள் பூரணமாய்அமுலுக்கு வராமல் ஒதுக்கப்பட்ட பிரதேசங்களில் நியாயமான அரசியல்

நடந்துவருகிறதா என்பதைக்கவனித்தல். (இவை எந்தப் பிரதேசங்கள் என்பதை 12 வது அத்தியாயத்தில் காண்க)

(f) இந்திய சமஸ்தானங்கள் சம்பந்தமான அக்கரைகளைப்பாது காத்தல்.

(g) கவர்னர்ஜெனரல் அவர்களுடைய உத்திரவுகளையும், கட்டளைகளையும் நிறைவேற்றுதல்.

53. மேற்படி விசேஷப்பொறுப்புகள் கவர்னர் அவர்களுக்குக் கொடுத்திருப்பதிலிருந்து மேற்படி விஷயங்கள் சம்பந்தமாக மந்திரிகளின் பொறுப்பு எடுபட்டுவிட்டது என்று எண்ணுவது தவறாகும். மேற்படி விஷயங்களையும் சாதாரணமாக மந்திரிகளே நிர்வகித்துவரவேண்டும். ஆனால் மேற்படி விசேஷப்பொறுப்புகள் கொடுக்கப்பட்டிருக்கிற விஷயங்கள் சம்பந்தமாக மந்திரிகளின் தீர்மானம் அல்லது பிரஸ்தாவனை கவர்னர் அவர்களுக்குச்சரியல்ல என்று தோன்றும்பக்ஷத்தில் ஷை தீர்மானம்அல்லது பிரஸ்தாவனைக்கு மாறாக உத்திரவுகள் பிறப்பிவிக்க கவர்னர் அவர்களுக்கு அதிகாரமுண்டு. ஷை சந்தர்ப்பங்களில் கவர்னர் அவர்கள் மந்திரிகளைக் கூப்பிட்டுவிட்டு அவர்களுடன் கலந்து, கூடியவரையில் தன்னுடைய அபிப்பிராயத்தை ஒப்புக்கொள்ள கவர்னர் அவர்கள் முயல்வார்கள். இதனால் மந்திரிகள் கவர்னர் அவர்களுடைய அபிப்பிராயத்துக்கு இணங்கலாம். அல்லது கவர்னர் அவர்களும் மந்திரிகளுடைய அபிப்பிராயத்துக்கு இணங்கலாம். இவ்விதம் கலந்துபேசுவதனால் அடிக்கடி கவர்னர் அவர்களும் மந்திரிகளும் சண்டைபோட்டுக்கொள்ளாமல், பொதுவாக அபிப்பிராயபேதமில்லாமலேயே எல்லா விஷயங்களும் நிர்வகிக்கப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

54. மாகாணங்களில் இப்பொழுது போலீஸ் இலாகா மந்திரிகளுடைய ஆளுகைக்கு மாற்றப்படவில்லை. ஆனால் புது அரசியலில் போலீஸ் இலாகாவும், மற்ற இலாகாக்களைப்போலவே மந்திரிகளின் ஆளுகைக்கு மாற்றப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு மாகாணத்திற்கும் தலைமை போலீஸ் அதிகாரி போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல். அவ

ருக்குக்கீழ் ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒரு போலீஸ் சூபரிண்டெண்டும் கீழ் அதிகாரிகளும் இருக்கிறார்கள். ஒவ்வொரு ஜில்லாவிலும் அமைதிக்குறைவு இல்லாமல் பாதுகாக்கும் பொறுப்பு இந்தப் போலீஸ் உத்தியோகஸ்தர்களிடமும் ஜில்லா மாஜிஸ்டிரேட்டாகிய கலெக்டரிடமும் விடப்பட்டிருக்கிறது. ஆகையால் புது அரசியலில் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் உள்பட எல்லா போலீஸ் அதிகாரிகளும், ஜில்லா மேஜிஸ்டிரேட்டாகிய ஜில்லா கலெக்டரும் மந்திரிகளின் உத்திரவுக்குக்கீழ்ப்பட்டு நடக்கவேண்டும். ஆனால் மந்திரிகளின் நிர்வாகத்துக்குச்சில நிர்ப்பந்தங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவைகள் இன்னவை என்றும், அவைகள் என்ன காரணத்தினால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன என்றும் நாம் கவனிப்போம்:—

a. போலீஸ் ஆக்டுகளையும் போலீஸ் ரூல்களையும் மாற்றவும் சீர்திருத்தம் செய்யவும் கவர்னர் அவர்களுடைய சம்மதம் அத்தியாவசியம். அவருடைய சம்மதமில்லாமல் எந்த மாறுதலும் செய்ய முடியாது. இவைகள் சம்பந்தமாக கவர்னர் ஜெனரல் அவர்களும் மாகாண கவர்னர்களுக்கு உத்திரவுகள் அனுப்பலாம்.

b. இரகசிய போலீஸ் இலாகா உத்தியோகஸ்தர்கள் அனுப்பும் ரிப்போர்ட்டுகளை இன்ஸ்பெக்டர் ஜெனரல் குறிப்பிடும் போலீஸ் அதிகாரிகளையும், கவர்னர் குறிப்பிடும் போலீஸ் இலாகாவைச் சேராத அதிகாரிகளையும் தவிர, வேறு எவரும் பார்க்கமுடியாது. கவர்னர் இஷ்டப்பட்டாலொழிய போலீஸ் இலாகாவைப் பொதுவாக நிர்வகிக்கிற மந்திரிகளும் கூட அவைகளைப்பார்வையிட அதிகாரமில்லை.

c. கலகக்காரர்களாலும் சதியாலோசனைக்காரர்களாலும், மாகாணத்தின் சாந்தத்திற்கும் அமைதிக்கும் பங்கம் ஏற்படாமல் இருக்கும்பொருட்டு கவர்னர் அவர்கள் மந்திரிகளின் நிர்வாகத்திலிருக்கும் போலீஸ் இலாகாவையோ அல்லது அதில் ஓர் பாகத்தையோ, அல்லது மற்ற எந்த இலாகாவையோ, மந்திரிகளின் நிர்வாகத்திலிருந்து விலக்கித் தன் நிர்வாகத்தில் வைத்துக்கொள்ளலாம்.

மேற்கண்ட ஏற்பாடுகள் அடியிற்கண்ட காரணங்களுக்காக ஏற்படுத்தப்பட்டிருப்பதாகக் கூட்டுக்கமிட்டி அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. ஷெ காரணங்கள் சரியா அல்லது சரியில்லையா என்பதைப்பற்றி நாம் ஆராய்வதில் பிரயோஜனமில்லை.

a. இந்திய மந்திரிகள் மற்ற இலாகாக்களில் பொறுப்பாட்சி அனுபவம் பூர்ணமாக அடையும்வரை யாதொரு நிபந்தனைகளுமில்லாமல் போலீஸ் இலாகாவைச்சேர்ந்த எல்லா அதிகாரங்களையும் மந்திரிகளுக்கு மாற்றிவிடுவது, தேசத்தின் அமைதியை உத்தேசித்து,உசிதமில்லை.

b. மந்திரிகள் தங்கள் கக்ஷியைச் சேர்ந்தவர்களின் தூண்டுதலினால், யாதொரு நியாயமான முகாந்திரமன்னியில் போலீஸ் இலாகாவின் உள்துறை நிர்வாகத்தில் தலையிட நேரிடும். அதனால் போலீஸ் அதிகாரிகளின் உத்சாகமும், சர்க்கார்பேரில் அவர்களுக்கிருக்கும் பக்தியும் நம்பிக்கையும் குறைவுபடும்.

c இந்தியாவில் சிற்சில சமயங்களில் ஏற்படுகிற இந்து முஸ்லீம் கலகங்கள் போன்ற ஜாதிச்சண்டை நேரிடும் பக்ஷத்தில், இந்திய மந்திரிகளின் ஆளுகைக்குள் இருக்கும் போலீஸ் அதிகாரிகள் பக்ஷபாதமில்லாமல் தங்கள் கடமையைச்செய்து வருகிறார்களா என்ற சந்தேகம் ஜனங்களுக்கு ஏற்படக்கூடும்.

55. தற்காலம் மாகாண கவர்ன்மெண்ட் சம்பந்தமான எல்லா விஷயங்களும் இலாகாக்களாகப்பிரிக்கப்பட்டு, அந்தந்த இலாகாவிற்கு ஒரு செக்ரடெரி நியமிக்கப்பட்டிருக்கிறார். அந்த இலாகாவுக்கு அவர் தலைவர். ஒவ்வொரு செக்ரடெரியும் அந்தந்த இலாகா சம்பந்தமான மந்திரிக்கோ அல்லது நிர்வாகசபை மெம்பருக்கோ கீழ்ப்படிந்து நடக்கக்கட்டுப்பட்டவர். செக்ரடெரிக்கும் மந்திரிக்கும், அல்லது செக்ரடெரிக்கும் நிர்வாகசபை மெம்பருக்கும் அபிப்பிராய பேதம் ஏற்பட்டால் மேற்படி விஷயமாக கவர்னரின் தீர்மானத்தைக்கோரத் தற்காலத்தில் செக்ரடெரிக்கு பாத்தியமுண்டு. மந்திரி அல்லது மெம்பர்களில்லாமலேயே செக்ரடரி கவர்னரிடம் தெரியப்படுத்தலாம். ஆனால் புது அரசியலில் கொஞ்சம் மாறுதல்கள் ஏற்படும். கவர்னர் அவர்களுக்கு எந்தெந்த விஷயங்கள்

சம்பந்தமாக விசேஷப்பொறுப்புகள் கொடுக்கப்பட்டிருக்கின்றனவோ அவைகள் சம்பந்தமாக வேண்டிய தகவல்களைக் கவர்னர் அவர்களுக்குத் தெரிவிக்கவேண்டிய பொறுப்பு செக்ரடெரிகளுக்கு உண்டு. மற்ற விஷயங்கள் சம்பந்தமாக செக்ரடெரிகள் கவர்னருடைய தீர்மானத்தைக்கோர அவசியமில்லை. அப்படி அவசியம் இருப்பதாகத் தோன்றினாலும், யாதொரு விஷயங்களையும், மந்திரிகளுடைய தகவலில்லாமல் செக்ரடெரிகள் கவர்னர் அவர்களுடன் கலந்துகொள்ளக்கூடாது.

56. மேற்படி செக்ரடெரிகள் சாதாரணமாக மந்திரிகளுக்குக் கீழ்ப்படிந்த அதிகாரிகளாதலால் அவர்கள் மந்திரிகளுக்கு யோசனை சொல்லவேண்டியவர்கள். கவர்னர் அவர்களுக்குப் புது அரசியலில் விசேஷப்பொறுப்புகள் கொடுக்கப்பட்டிருக்கிறபடியால் அவைகள் சம்பந்தமாக கவர்னருக்கு யோசனை சொல்வதற்கும், உதவி புரிவதற்கும், அவருடைய உத்திரவுகளை அமுலுக்குக் கொண்டுவருவதற்கும் தனியாக ஒரு செக்ரடெரியும், மற்ற உப அதிகாரிகளும், ஏற்படுத்தப்படும். கவர்னரின் செக்ரடெரியின் கடமைகளில் முக்கியமானவைகளாவன:—

a. மாகாண நிர்வாக சம்பந்தமான எல்லா விஷயங்களையும் அப்போதைக்கப்போது கவர்னர் அவர்களுக்குத் தெரியப்படுத்துதல்.

b. கவர்னர் அவர்களின் சார்பாக மந்திரிகளுடன் கலந்து பேசுதல்.

c. கவர்னர் அவர்களை பேட்டி காண வருபவர்களை கவர்னரின் சார்பாகச் சந்தித்தல்.

d. ஏதாவது இலாகாக்களை மந்திரிகளிடமிருந்து எடுத்துவிடவேண்டுமென்று கவர்னர் அவர்கள் அபிப்பிராயப்பட்டால் அந்த இலாகாக்களை கவர்னருக்காக நிர்வகித்தல்.

57. கவர்னர்ஜெனரல் அவர்களைப்போலவே கவர்னர் அவர்களுக்கும் மாகாண சட்டசபைகள் சம்பந்தமாக அடியிற்கண்ட அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன:—

a. சட்டசபை சம்மதமன்னியில் கவர்னர் ஆக்டுகள் என்ற ஆக்டுகள் வெளியிடுதல். இவைகளுக்கு கவர்னர்ஜெனரல் அவர்களின் சம்மதம் அவசியம்.

b. சட்டசபையில் பிரவேசனம் செய்யப்பட்ட அல்லது செய்யப்படப்போகிற மசோதாக்களில் ஏதாவது ஓர் அம்சம் அல்லது திருத்தப் பிரேரேபணையை விவாதம்செய்யாமல் தடுத்துவிடுதல்.

c. சட்டசபைகளில் நடவடிக்கை நடத்தும் முறை சம்பந்தமாக விதிகள் ஏற்படுத்துதல்.

58. கவர்னர்ஜெனரல் அவர்களுடைய சம்மதத்துடன் கவர்னர் அவர்கள் அவசரச்சட்டங்கள் ஏற்படுத்தலாம்.

59. சட்டசபைகளில் தீர்மானிக்கப்பட்ட மசோதாக்களுக்கு சம்மதம் கொடுக்கவோ, மறுக்கவோ, அல்லது கவர்னர்ஜெனரல் அவர்களின் தீர்மானத்துக்கு அனுப்பவோ, கவர்னர் அவர்களுக்கு அதிகாரமுண்டு.

60. எந்தெந்த விஷயங்களில் மந்திரிகளின் ஆலோசனையைக் கேழ்க்காமலோ, அல்லது அவர்கள் அபிப்பிராயத்துக்கு மாருகவோ, கவர்னர் அவர்கள் நடக்கிருரோ அந்த விஷயங்கள் சம்பந்தப்பட்டமட்டில் கவர்னர்ஜெனரல் அவர்களின் உத்திரவுக்கும் இந்தியா செக்ரடெரி அவர்களின் உத்திரவுக்கும் கீழ்ப்படிந்து கவர்னர் அவர்கள் நடக்கவேண்டும்.

# அத்தியாயம் 10.

## சென்னை சட்டசபை.

61. சென்னை சட்டசபை இரண்டு சாசனசாலையுடன் கூடியது (bi-cameral). ஒன்றிற்கு லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளி என்றும் மற்றொன்றுக்கு லெஜிஸ்லேடிவ் கவுன்ஸில் என்றும் பெயர். ஒரு மசோதா ஆக்டாகவேண்டுமானுல், அது இரண்டு சாசன சாலைகளிலும் ஆமோதிக்கப்பட்டு கவர்னர் அவர்களும் சம்மதம் கொடுக்கவேண்டும்.

62. லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளி.

இதற்கு மொத்தம் 215 மெம்பர்கள். அவர்கள் வகுப்புவாரியாக அடியிற்கண்டபடி பிரிக்கப்பட்டு ஐந்து வருஷங்களுக்குத் தேர்தல் செய்யப்படுவார்கள்:—

| | | | |
|---|---|---|---|
| பொதுத் தொகுதிகள். (இதில் ஷெடியூல்ட் ஜாதியாருக்கு 30 ஸ்தானங்கள் ரிசர்வ் செய்யப்பட்டிருக்கின்றன.) | 146 | நிலச்சுவான்தார்கள் | 6 |
| | | சர்வகலாசாலை | 1 |
| | | தொழிலாளிகள் | 6 |
| | | பிற்போக்கான ஜனங்கள் | 1 |
| மகம்மதியர் | 28 | ஸ்திரீத் தொகுதிகள்: | |
| இந்திய கிறிஸ்துவர்கள் | 8 | பொதுத்தொகுதிகள் | 6 |
| ஆங்கிலோ இந்தியர் | 2 | மகம்மதியர் | 1 |
| ஐரோப்பியர் | 3 | இந்திய கிறிஸ்துவர் | 1 |
| வியாபாரம், வர்த்தகம், கைத்தொழில் | 6 | மொத்தம் | 215 |

இவர்களின் தேர்தல், ஓட்டர்களின் யோக்கியதாம்சம், அபேக்ஷகர்களின் யோக்கியதாம்சம் முதலிய விபரங்களை இரண்டாவது அனுபந்தத்தில் பார்க்கவும்.

63. சென்னை லெஜிஸ்லேடிவ் கவுன்ஸில்.

இதில் 54 க்குக் குறையாமல் 56 க்கு மேற்படாமல் மெம்பர்கள் இருப்பார்கள். அவர்கள் அடியிற்கண்டபடி வகுப்புவாரியாகப் பிரிக்கப்பட்டிருக்கிறார்கள் —

| மொத்தம் | பொதுத் தொகுதிகள் | மகம்மதிய தொகுதிகள் | இந்திய கிறிஸ்துவ தொகுதிகள் | ஐரோப்பிய தொகுதிகள் | கவர்னர் அவர்களால் நியமுகம் |
|---|---|---|---|---|---|
| 54-க்குக் குறையாமல் 56-க்கு மேற்படாமல் | 35 | 7 | 3 | 1 | 8-க்குக் குறையாமல் 10-க்கு மேற்படாமல் |

டி. மெம்பர்கள் 9 வருஷத்துக்குத் தேர்தல் அல்லது நியமுகம் செய்யப்படுவார்கள். ஆனால் முதற் தேர்தல் அல்லது நியமுகத்தில் $\frac{1}{3}$ மெம்பர்கள் 3 வருஷத்துக்கும், $\frac{1}{3}$ மெம்பர்கள் 6 வருஷத்துக்கும், $\frac{1}{3}$ மெம்பர்கள் 9 வருஷத்துக்கும் மெம்பர் ஸ்தானம் வகிப்பார்கள். இந்த ஏற்பாட்டினால் லெஜிஸ்லேடிவ் கவுன்ஸில் கலையாமல் சாஸ்வதமாகயிருக்கும்.

மேற்படி மெம்பர்களின் தேர்தல் விஷயமாகவும் ஓட்டர்கள் அபேக்ஷகர்கள் இவர்களின் யோக்யதாம்சம் விஷயமாகவும் பூரா விவரங்களையும் இரண்டாவது அனுபந்தத்தில் பார்க்கவும்.

64. சென்னை சட்டசபையின் இரண்டு சாசனசாலைகளுக்கும் அந்தந்த சாசனசாலையால் தேர்ந்தெடுக்கப்பட்ட அக்கிராசனாதிபதியும், உப அக்கிராசனாதிபதியும் உண்டு. சபை கூடி காரியம் நடத்துவதற்கு லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளியில் மொத்தம் மெம்பர்களில் $\frac{1}{6}$ பங்கும்,அதாவது 36 மெம்பர்களும், லெஜிஸ்லேடிவ் கவுன்ஸிலில் 12 மெம்பர்களும் ஆஜராகியிருக்க வேண்டும். அக்கிராசனாதிபதி, உப அக்கிராசனாதிபதி இவர்களின் சம்பளம், படி, முதலானது அந்தந்த சபை தீர்மானித்துக்கொள்ளவேண்டும். அப்படித் தீர்மானம் ஆகும் வரை அவைகளை கவர்னர் அவர்கள் நிர்ணயிப்பார். ஒவ்வொரு பிரிவிலும் அலுவல் நடத்தும் விஷயமாக அந்தந்தப்பிரிவு சபை, விதிகள் ஏற்படுத்திக் கொள்ளலாம். கவர்னர் அவர்களும் தன் விசேஷப் பொறுப்புகளை நிர்வகிப்பதற்காகவும், இன்னின்ன விஷயங்களில் சர்ச்சை செய்யக்கூடாது, கேள்விகள் கேட்கக் கூடாது என்றும், அந்தந்தப் பிரிவின் அக்கிராசனாதிபதியைக் கலந்துகொண்டு விதிகள் ஏற்படுத்தலாம்.

65. ஒவ்வொரு சட்டசபை மெம்பரும், சட்டசபையில் தன் இடத்தில்போய் உட்காருமுன் நமது சக்கிரவர்த்தியிடமும் அவருடைய வாரீசுகளிடமும் விசுவாசமாக இருப்பதாக ஒப்புக்கொண்டு பிரமாணம் பண்ணவேண்டும்.

66. ஒருவர் இரண்டு சபைகளிலும் மெம்பராகயிருக்கக் கூடாது. ஒரு அபேக்ஷகர் இரண்டு சபைகளுக்கும் தேர்ந்தெடுக்

கப்பட்டால் அவர் எந்த சபையின் ஸ்தானத்தைக்காலிசெய்யவேண்டு மென்ற விஷயத்தைத்துலக்கி விதிகள் கவர்னர் ஏற்படுத்தவேண்டும். ஐக்கிய சட்டசபைக்கும் மாகாண சட்டசபைக்கும், ஒரு நபர் தேர்ந்தெடுக்கப்பட்டு அவர் மாகாணசபையில் ஸ்தானம் வகிக்க வேண்டுமென்று அபிப்பிராயப்பட்டால் குறிப்பிட்டகாலத்துக்குள் ஐக்கிய சபை ஸ்தானத்தை ராஜிநாமாச் செய்யவேண்டும். இல்லா விட்டால் அவருக்கு மாகாண சபையின் ஸ்தானம் காலியாகி விடப்பட்டதாகக் கருதப்பட்டு ஐக்கியசபை ஸ்தானம் ஊர்ஜிதத் துக்கு வரும்.

67. ஒரு மெம்பர் சபை கூடும்போது ஷை சபையின் அனுமதியில்லாமல் 60 நாள் ஆஜராகாமலிருந்தால், அவரை மெம்பர் ஸ்தானத்தை விட்டு அந்தசபை நீக்கலாம்.

68. ஒரு மெம்பர் 69 வது பாராவில் சொல்லப்பட்டிருக்கும் அம்சங்களுக்கு உட்படும்படி நேர்ந்தால் அல்லது எழுத்து மூல மாக கவர்னர் அவர்களிடம் தன் ஸ்தானத்தை ராஜிநாமாச்செய்தால் அவர் மெம்பர்ஸ்தானத்தை இழந்துவிடுவார்.

69. அடியிற்கண்ட நிர்ப்பந்தங்கள் உள்ளவர்கள் மெம்பர் ஸ்தானத்துக்கு அபேக்ஷகராக இருக்க முடியாது, மெம்பராகவு மிருக்க முடியாது:—

a. சர்க்காரில் சம்பளம் அல்லது லாபம் கிடைக்கக்கூடிய உத்தியோகத்தில் இருத்தல். சில குறிப்பிட்ட உத்தியோகங்கள் (உதாரணமாக சர்க்கார் வக்கில் உத்தியோகம்) மேற்படி விதிக்குட் படமாட்டாது என்று சட்டசபை ஆக்ட் மூலம் தீர்மானிக்கலாம்.

மாகாண கவர்ன்மெண்டிலோ அல்லது ஐக்கிய கவர்ன்மெண் டிலோ மந்திரி உத்தியோகம் வகிப்பவர்கள் இந்த விதிக்கு உள்பட மாட்டார்கள்.

b. புத்திஸ்வாதீனமில்லையென்று சரியான அதிகாரமுள்ள கோர்ட்டாரால் தீர்மானிக்கப்படுதல்.

c. டிஸ்சார்ஜ் ஆகாத இன்சால்வெண்டாக இருத்தல்.

d. எலெக்ஷன் சம்பந்தமான குற்றங்கள் எதாவது செய்து அதற்காக தண்டிக்கப்பட்டிருந்தாலும், அல்லது அந்த தண்டனை அடைந்த இவ்வளவு காலம்வரை அவர் அபேக்ஷகராகவோ, மெம்பராகவோ, இருக்கக்கூடாது என்று சட்டபூர்வமாக விதித்திருந்தால், ஷை கால வரை யளவு முடியும் வரையிலும்.

e. ஒரு கிரிமினல் கோர்ட்டில் 2 வருஷத்துக்கு மேல்பட்ட காலத்துக்கு தண்டனையடைந்து, அது முடிவடைந்து 5-வருஷ அல்லது கவர்னர் அவர்களால் குறிப்பிடப்படும் 5 வருஷத்துக்குக் குறைந்த கால வரையளவு முடியும் வரையிலும்.

சட்டசபை மெம்பராக இருக்கும் அங்கத்தினர் மேற்படி (d) & (e) ல் கண்ட குற்றங்களுக்கு தண்டனை யடையும் பக்ஷத்தில் அதிலிருந்து மூன்று மாதம் வரை, அல்லது அந்த தண்டனையின் பேரில் அப்பீல் அல்லது ரிவிஷன் செய்தால் அந்த அப்பீல் அல்லது ரிவிஷன் முடியும் வரை அவருடைய ஸ்தானம் காலியாகாது. ஆனால் அந்தக்காலத்தில் அவர் மெம்பர் ஸ்தானத்தில் சட்டசபையில் உட்காரக்கூடாது, ஓட் செய்யவும் கூடாது.

70. மேலேகண்ட ஷரத்துக்கள்படி சட்டசபையில் மெம்பராக இருக்கவோ, அல்லது ஓட் செய்யவோ எவர்களுக்கு பாத்தியமில்லையோ அவர்கள் ஷை நிபந்தனைகளுக்கு மீறி சட்டசபையில் உட்கார்ந்தால் அல்லது ஓட் செய்தால், அப்படிச்செய்யும் ஒவ்வொரு நாளுக்கும் அவருக்கு ரூ 500/ அபராதம் விதிக்கலாம்.

71. சட்டசபைகளில் நடவடிக்கைகள் நடத்துவதற்கு ஏற்படுத்தப்படும் விதிகளில்கண்ட நிபந்தனைகளுக்குள்பட்டு, சட்டசபைகளில் மெம்பர்கள் தாராளமாகப் பேசலாம். சட்டசபைகளில் பேசப்பட்ட விஷயங்கள் சம்பந்தமாக எந்தக் கோர்ட்டிலும், யாதொரு நடவடிக்கையும், எவரும் நடத்த முடியாது. சட்டசபையில் பேசினவைகளைப் பிரசுரப்படுத்தினதற்காகவும், எவர்பேரிலும் எவ்வித நடவடிக்கையும் நடத்தமுடியாது.

சட்டசபை மெம்பர்களுடைய சுதந்திரங்கள் என்ன என்ன என்று அந்தந்த சபைகள் அப்போதைக்கப்போது தீர்மானித்துக் கொள்ள வேண்டும்.

ஆனால் சட்டசபைகளுக்குக் கோர்ட்டுக்கு இருக்கும் அதிகாரங்கள் யாதொன்றும் கிடையாது. சட்டசபையில் அமுலிலிருக்கும் ரூல்களுக்கு விரோதமாக நடக்கும் நபர்களைச் சபையை விட்டு வெளியே கடத்தும் அதிகாரத்தைத்தவிர எவரையும் தண்டிக்கக் கூடிய அதிகாரம் யாதொன்றும் கிடையாது.

சட்டசபை முன்பாகவோ, சட்டசபைக் கமிட்டியின் முன்பாகவோ சாக்ஷிசொல்லவோ அல்லது தஸ்தாவேசு ஆஜர்படுத்தவோ ஒரு நபர் மறுத்தால் அவரைக் கிரிமினல் கோர்ட்டில் தண்டிக்குமாறு சட்டங்கள், ஷை சட்டசபை ஏற்படுத்தலாம். ஆனால் சர்க்கார் உத்தியோகஸ்தர்களைப் பொறுத்தமட்டிலும் ரகசியமான விஷயங்களை வெளியிடுதல் சம்பந்தமாகவும் கவர்னர் அவர்கள் ஏற்படுத்தும் ரூல்களுக்கு உட்பட்டு ஷை சட்டம் பிரயோகிக்கப்படும்.

# அத்தியாயம் 11.

## சென்னை சட்டசபையின் அதிகாரமும் சட்டங்கள் ஏற்படுத்தும் முறையும்.

72. ஐக்கிய சட்டசபையைப் போலில்லாமல் மாகாண சட்டசபையில் இரண்டு பிரிவுக்கும் சமத்வமான அதிகாரம் இல்லை. வரி சம்பந்தம் இல்லாத மசோதாக்களைப் பொறுத்து இரண்டு பிரிவுக்கும் அநேகமாக சம அதிகாரமுண்டு. ஆனால் வரிவிதிக்கும் மசோதாக்கள் சம்பந்தமாகவும் மாகாண வரவு செலவு திட்டத்தை அங்கிகரிக்கும் விஷயமாகவும் லெஜிஸ்லேடிவ்கவுன்ஸிலுக்கு அதிகாரம் மிகவும் குறைச்சல்.

73. வரிசம்பந்தமில்லாத மசோதாக்கள்.

உ. ஒரு மசோதா சட்டமாகவேண்டுமானால், அது இரண்டு பிரிவிலும் நிறைவேறி கவர்னர் அவர்களால் அனுமதிக்கப்பட வேண்டும்.

b. மேற்படி மசோதாக்களை எந்தப்பிரிவிலும் பிரவேசனம் செய்யலாம்.

c. லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளியில் பிரவேசனம் செய்யப்பட்டு அங்கேயே நடந்துகொண்டிருக்கிற மசோதாக்களும், லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளியில் நிறைவேறினபின் லெஜிஸ்லேடிவ் கவுன்ஸிலில் நடந்துகொண்டிருக்கிற மசோதாக்களும், ஷை லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளி குலைக்கப்பட்டால் அல்லது குலைந்துபோனால் நசித்து விடும். அதாவது அவைகளை மறுபடியும் பிரவேசனம் செய்து இரண்டு பிரிவிலும் நிறைவேற்றவேண்டும். லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளியில் நிறைவேறாமல், லெஜிஸ்லேடிவ் கவுன்ஸிலில் நடந்துகொண்டிருக்கும் மசோதாக்களுக்கு, லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளி குலைதலால் யாதொரு பங்கமும் ஏற்படாது.

d. ஒரு மசோதா லெஜிஸ்லேடிவ் கவுன்ஸிலில் நிறைவேற்றப்பட்டு லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளியில் நிறைவேறாமல் தள்ளப்பட்டால் அந்த மசோதா நசித்துப்போய்விடும். லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளியால் நிறைவேற்றப்பட்ட ஒரு மசோதா, ஒரு வருஷகாலத்திற்குள் லெஜிஸ்லேடிவ் கவுன்ஸிலில் நிறைவேற்றப்படாமலிருந்தால், கவர்னர் அவர்கள் ஷை இரண்டு சபைகளும் சேர்ந்து கூடி ஷை மசோதாவை ஆலோசிக்கவேண்டும் என்று உத்திரவு செய்யலாம். பணம் சம்பந்தமான மசோதாக்களாகயிருந்தாலும், கவர்னர் அவர்களுடைய விசேஷப்பொறுப்புகள் சம்பந்தப்பட்டதாக யிருந்தாலும், ஷை ஜாயிண்ட் மீட்டிங்கை 12 மாதம் முடிவடைவதற்கு முன்னமேயே கூட்டுவிக்கலாம். ஷை ஜாயிண்ட் மீட்டிங்கில் மெஜாரிட்டி மெம்பர்களால் ஷை மசோதா நிறைவேற்றப்பட்டால், அது சட்டசபையின் இரண்டு பிரிவாலும் தனித்தனியே நிறைவேற்றப்பட்டதாகவே கருதப்படும்.

e. இரண்டு பிரிவிலும் நிறைவேற்றப்பட்ட மசோதாக்கள் கவர்னருடைய சம்மதிக்கு அனுப்பப்படவேண்டும். கவர்னருக்கு சம்மதி கொடுக்கவோ, மறுக்கவோ, கவர்னர்ஜெனரல் அவர்களின் சம்மதத்திற்காக நிறுத்திவைக்கவோ அல்லது, சில திருத்தப்பிரேர

பணைகளை சிபார்சு செய்து, அவைகள் சம்பந்தமாக ஷை மசோதா வைப்புனராலோசனைசெய்ய சட்டசபைக்குத் திருப்பி அனுப்பவோ, அதிகாரமுண்டு.

f. கவர்னர்ஜெனரல் சம்மதத்திற்காக நிறுத்திவைக்கப்பட்ட மசோதாக்களுக்கு கவர்னர்ஜெனரல் அவர்கள் சம்மதிகொடுக்கவோ, மறுக்கவோ, மன்னருடைய அபிப்பிராயப்படி நடப்பதற்காக நிறுத்திவைக்கவோ, அல்லது புனராலோசனை செய்யும்படி சட்டசபைக்குத் திரும்ப அனுப்பும்படிக் கவர்னருக்கு உத்திரவு கொடுக்கவோ, அதிகாரம் உண்டு.

g. மன்னருடைய அபிப்பிராயத்திற்காக நிறுத்திவைக்கப்பட்ட மசோதாக்களுக்கு, கவர்னர் அவர்களுக்கு ஷை மசோதா அனுப்பப்பட்ட தேதி முதல் ஒரு வருஷத்திற்குள், மன்னர் அவர்கள் சம்மதிக்காவிடில், அந்த மசோதா நசித்துப்போகும்.

h. கவர்னர் அல்லது கவர்னர்ஜெனரல் சம்மதிகொடுத்து நிறைவேற்றப்பட்ட ஆக்டுகளை, மன்னர் அவர்கள் ஒரு வருஷத்திற்குள் ரத்துச்செய்து விடலாம்.

74. வரி விதிக்கும் மசோதாக்கள், பணம் சம்பந்தமான மசோதாக்கள்:—

a. இவைகளை லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளியில் தான், பிரவேசனம் செய்யவேண்டும். அஸெம்பிளி இவைகளை மறுத்துவிட்டால், அவை அப்படியே நசித்துப்போகும்.

b. இவைகளைப் பிரவேசனம் செய்வதற்கு கவர்னர் அவர்களுடைய சம்மதம் அவசியம். மற்றப்படி மேலே 73 வது பாராவில் சொல்லிய விதிகள் இந்த மசோதாக்களுக்கும் பொருந்தும்.

75. வரவு செலவு திட்டம்:—

a. ஒவ்வொரு வருஷமும், அந்தந்த வருஷத்திய வரவு செலவு திட்டம் தயார்செய்து, கவர்னர் அவர்கள் சட்டசபையின் இரண்டு பிரிவுக்கும் அனுப்பவேண்டும்.

b. செலவு ஐட்டங்களில் அடியிற் குறிப்பிட்டிருக்கிறதும், மாகாண வரும்படியிலிருந்து சார்ஜாக(charge)முதலில் செலவுசெய்ய வேண்டியதுமான, ஐட்டங்களைத் தனித்தனியாகவும், மற்ற செலவு ஐட்டங்களைத் தனியாகவும் ஷை திட்டத்தில் துலக்கவேண்டும். தன்னுடைய விசேஷப்பொறுப்புகள் சம்பந்தமான செலவுக்காகப் பிரத்தியேகமாக கவர்னர் அவர்கள், மந்திரிகளின் சம்மதம் அன்னியில், ஏதாவது சில தொகைகளை ஷை செலவு திட்டத்தில் சேர்த்திருந்தால், அவைகளைத் தனியாகத்துலக்கவேண்டும்.

c. சார்ஜாகச்செலவு செய்யப்படவேண்டிய ஐட்டங்களாவன:.

1. கவர்னர் அவர்களின் சம்பளம், அல்லவுன்ஸ் முதலியன.

2. மாகாணத்திலிருந்து கொடுக்கப்படவேண்டிய கடன் தொகை, அதின் வட்டி, அதைத் தீர்ப்பதற்காகத் துண்டுபடுத்தப் படும் தொகை (sinking fund), அது சம்பந்தமான இதர செலவுகள்.

3. மாகாண மந்திரிகள், மாகாண அட்வகேட்ஜெனரல் கவர்னர் அவர்களுடைய சிப்பந்திகள், ஹைகோர்ட்டு ஜட்ஜ்கள், இவர்களுடைய சம்பளமும் அல்லவுன்ஸும்.

4. கோர்ட்டு அல்லது பஞ்சாயத்துத் தீர்மானப்படிச் செலுத்த வேண்டிய தொகை.

5. சில உத்தியோகஸ்தர்களின் சம்பளம், பென்ஷன்.

6. இன்னும் சில சில்லரை ஐட்டங்கள்.

d. சார்ஜாகச்செலவிடப்படவேண்டியஐட்டங்களைச்சட்டசபையின் அனுமதியைக்கேட்டுச் செலவிட வேண்டியதில்லை. அதாவது அந்தச் செலவுகளைச் சட்டசபையின் ஓட்டுக்கு விடவேண்டியதில்லை. ஆனால் அவைகளில் முதலாவது ஐட்டமாகிய கவர்னரின் சம்பளம், அல்லவுன்ஸ் சம்பந்தமான விஷயத்தைத் தவிர மற்ற எல்லா விஷயங்களைப்பற்றி இரண்டு சபையும் வாதம் செய்யலாம்.

e. ஷை செலவு ஐட்டங்களைத் தவிர மற்ற எல்லா ஐட்டங்களையும் செலவு செய்ய லெஜிஸ்லேடிவ் அஸெம்ப்ளியை அனுமதி கேட்க

வேண்டும். லெஜிஸ்லேடிவ் கவுன்ஸிலின் அனுமதி கேட்கவேண்டியதில்லை. மேற்படி செலவு திட்டத்தின் ஐட்டங்களைப் பூராவாக மறுக்கவோ, அல்லது தொகையைக் குறைக்கவோ லெஜிஸ்லேடிவ் அஸெம்பிளிக்கு அதிகாரமுண்டு.

f. ஏதாவது ஒரு செலவு ஐட்டம் அஸெம்பிளியால் பூராவாகவோ அல்லது பகுதியாகவோ குறைக்கப்பட்டு, அதனால் தன்னுடைய விசேஷப் பொறுப்புகளின் நிர்வாகம் பாதிக்கப்படுமென்று கவர்னர் அவர்கள் எண்ணினால், குறைக்கப்பட்ட தொகை பூராவையோ அல்லது அதின் ஒரு பாகத்தையோ மறுபடியும் செலவு திட்டத்தில் சேர்த்துக்கொள்ள கவர்னர் அனுமதி கொடுக்கலாம்.

76. சட்டசபையில் சர்ச்சை செய்யக்கூடிய விஷயமாக அடியிற்கண்ட நிபந்தனைகளும், நிர்ப்பந்தங்களும் உண்டு.

a. மாகாணத்தின் அக்கரையையாவது அல்லது மாகாணத்தில் ஸ்திரமாகக்குடியிருக்கும் ஒரு பிரிட்டிஷ் பிரஜையின் அக்கரையையாவது பாதிக்கிறது என்று கவர்னர் அவர்கள் அபிப்பிராயப்பட்டு அனுமதி கொடுத்தாலன்றி, இந்திய சமஸ்தானங்கள் சம்பந்தமாக யாதொரு விஷயத்தைப்பற்றியும் மெம்பர்கள் சட்டசபையில் சர்ச்சை செய்யக்கூடாது; கேள்விகளும் கேட்கக்கூடாது.

b. கவர்னர் அவர்கள் அனுமதி கொடுத்தாலொழிய நமது சக்கிரவர்த்தி அல்லது கவர்னர்ஜெனரலுக்கும் அன்னிய தேசங்கள் அல்லது அன்னிய தேசத்து ராஜாக்களுக்கும் உள்ள சம்பந்தத்தை பாதிக்கக்கூடிய விஷயங்களைப்பற்றி மெம்பர்கள் சர்ச்சை செய்யக்கூடாது; கேள்விகளும் கேட்கக்கூடாது.

c. ஒதுக்கப்பட்ட பிரதேசங்களின் சிலவு திட்டங்கள் சம்பந்தமாக சர்ச்சைகள் கேள்விகள் இவைகளைத்தவிறவேறு விஷயங்களைப் பற்றி சர்ச்சையாவது கேள்வியாவது கவர்னர் அவர்களின் அனுமதியில்லாமல் செய்யக்கூடாது, கேட்கக்கூடாது.

d. ஹைகோர்ட்டு ஜட்ஜ்கள், பெடரல், (ஐக்கிய) கோர்ட்டு ஜட்ஜ்கள், இவர்கள் ஜட்ஜ் ஹோதாவில் நடந்துகொள்வதைப்பற்றி யாதொரு சர்ச்சையும் செய்யக்கூடாது.

77. சட்டசபையின் இரண்டு பிரிவுகளும் சேர்ந்து கூட்டு சபையாகக் கூடும்போது லெஜிஸ்லேடிவ் கவுன்ஸிலின் அக்கிராசனாதிபதி அக்கிராசனம் வகிப்பார். அவர் ஆஜரில்லாவிடில் சட்டசபை விதிகளில் விதித்திருக்கிறபடி நடந்துகொள்ள வேண்டும்.

78. சட்டசபையில் எல்லா நடவடிக்கைகளையும் இங்கிலீஷிலேயே நடத்தவேண்டும். இங்கிலீஷ் தெரியாத மெம்பர்கள் தங்கள் தாய்பாஷையை உபயோகப்படுத்தலாம்.

79. சட்டசபையின் நடவடிக்கைகள் யாதொன்றும் நடத்தியமுறை ஒழுங்கீனம் என்ற காரணத்துக்காக, செல்லாது என்று தீர்மானம் செய்ய எந்தக் கோர்ட்டுக்கும் அதிகாரமில்லை.

80. சட்டசபையில் அலுவல்களை ஒழுங்காக நடத்தச் சட்டப்படி எந்த அதிகாரி அல்லது மெம்பருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறதோ, அந்த அதிகாரி அல்லது மெம்பர் மேற்படி அலுவல் நடத்தும் விஷயமாக எந்தக் கோர்ட்டுக்கும் கட்டுப்பட்டவரல்ல.

## அத்தியாயம் 12.

### ஒதுக்கப்பட்ட பிரதேசங்கள்.

81. 1917-ம் வருஷத்தில் வெளிப்படுத்தப்பட்ட அறிக்கையை அனுசரித்து இந்தியாவில் பொறுப்பாட்சி ஸ்தாபனங்கள் 1919-வது வருஷத்து கவர்ன்மெண்ட் ஆப் இந்தியா ஆக்டுப்படி ஏற்படுத்தும் பொழுதே இந்தியாவில் 9 மாகாணங்களில் மட்டும் இரட்டை யாட்சியாகப் பொறுப்பாட்சி ஏற்படுத்தப்பட்டதென்றும், மற்ற மாகாணங்களில் ஏற்படுத்தப்படவில்லையென்றும் நாம் ஏற்கனவே கூறியிருக்கிறோம். மேற்படி இரட்டை ஆட்சி மாகாணங்களிலும் கூட சில பாகத்தில் இருக்கும் ஜாதியார்கள் மிகவும் அநாகரீகமாகவும், புராதன வழக்கங்கள் உள்ளவர்களாகவும் இருக்கிறார்கள் என்றும், புதிய சீர்திருத்தங்களினால் அவர்களுக்கு யாதொரு பிரயோசனமும் ஏற்படக்கூடியதில்லையென்றும் தீர்மானித்து, மேற்படி பாகங்கள் சீர்திருத்தங்களிலிருந்து ஒதுக்கப்பட்டன. மதராஸ் ராஜதானியில் இரண்டு ஒதுக்கப்பட்ட பிரதேசங்கள் இருக்கின்றன.

ஒன்று லக்ஷதீபம், மினிகாய் என்ற தீவுகள். மற்றொன்று மதராஸ் ஏஜென்ஸி பிரதேசம் என்ற பெயருடன் கஞ்சம், விசாகப்பட்டணம், கோதாவரி இந்த மூன்று ஜில்லாக்களின் பாகங்களாக இருக்கிறது. இந்திய சட்டசபையிலும், மதராஸ் சட்டசபையிலும் ஏற்படுத்தப் படும் சட்டங்கள் இந்தப் பிரதேசத்தில் செல்லாது. அந்தந்த ஜில்லா கலெக்டர்கள், கவர்னர் அவர்களின் ஏஜண்டாக மேற்படி பிரதே சத்தை நிர்வகித்து வருகிறார்கள். என்னென்ன சட்டங்கள் மேற்படி பிரதேசத்திற்குப் பிரயோகிக்கலாம் என்று கவர்னர் அவர் கள் தீர்மானிக்கிறாரோ அந்தச் சட்டங்கள்தான் மேற்படி பிரதேசத் தில் அமுலிலிருக்கும்.

82. புதிய அரசியலிலும் மேற்படி பிரதேசங்கள் ஒதுக்கப் பட்ட பிரதேசங்களாக இருக்கின்றன. அவைகளின் நிர்வாக சம் பந்தமாகச் சில அம்சங்கள் கவனிக்கத்தக்கது:—

a. மந்திரிகளின் நிர்வாகம் மேற்படி பிரதேசத்திலும் செல்லும். ஆனால் மேற்படி பிரதேசங்கள் சம்பந்தமாக கவர்னர் அவர்களுக்கு விசேஷப் பொறுப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. இதனால் கவர்னர் அவர்கள் மந்திரிகளின் அபிப்பிராயத்தை ஒப்புக்கொள்ளாவிட்டால், தானே வேண்டிய உத்திரவுகள் வெளியிடலாம். அவைகளை நிர் வாக உத்தியோகஸ்தர்கள் அமுலுக்குக் கொண்டுவர வேண்டும்.

b. ஐக்கிய சட்டசபையிலோ அல்லது சென்னை சட்டசபையி லோ தீர்மானிக்கப்படும் சட்டதிட்டங்கள் மேற்படி பிரதேசங்களில் செல்லாது. அவைகள் அந்தப் பிரதேசத்தில் பிரயோகிக்கப்பட வேண்டுமானால், அந்தப்படி கவர்னர் அவர்கள் ஒரு அறிக்கை பிறப்பிவிக்கவேண்டும்.

c. மந்திரிகளின் சம்மதமன்னியில் கவர்னர் அவர்கள் மேற்படி பிரதேசங்களுக்காகப் பிரத்தியேகமாகச்சட்ட திட்டங்கள் உண்டு பண்ணலாம். இந்தச்சட்டதிட்டங்கள் கவர்னர் ஜெனரல் அவர் களால் ஆமோதிக்கப்படவேண்டும்.

# அத்தியாயம் 13.

## சட்டசபைகளின் அதிகாரங்கள்

83. சமஷ்டி அல்லது ஐக்கிய அரசாட்சி ஸ்தாபிக்கப்படுவதற்குமுன் சுயேச்சாதிகாரமுள்ள மாகாணங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கவேண்டுமென்றும், ஷை மாகாணங்கள் தங்கள் பொது நன்மையையுத்தேசித்துத் தங்களைப் பொதுவாகப் பாதிக்கக்கூடிய விஷயங்கள் எல்லாவற்றையும் ஷை ஐக்கிய ராஜாங்கத்தின் நிர்வாகத்துக்கு விட்டுவிடவேண்டும் என்றும் நாம் ஏற்கனவே கூறியிருக்கிறோம். எப்பொழுது ஷை விஷயங்களின் நிர்வாகத்தை ஐக்கியசர்க்காருக்கும் ஐக்கிய சட்டசபைக்கும் பராதீனப்படுத்தி யிருக்கிறார்களோ, அவ் விஷயங்கள் சம்பந்தமாக மாகாண சர்க்காரும் மாகாண சட்டசபையும் பிரவேசிக்க பாத்தியமில்லை. அதேமாதிரி, எந்த விஷயங்கள் தங்களுக்கு மாற்றப் படவில்லையோ அந்த விஷயங்கள் சம்பந்தமாக ஐக்கிய கவர்ன்மெண்டார் பிரவேசிக்க பாத்தியமில்லை. ஆகையால் ஒவ்வொரு சமஷ்டி அல்லது ஐக்கிய அரசியலிலும், இன்னின்ன விஷயங்கள் ஐக்கிய விஷயங்கள் என்றும், இன்னின்ன விஷயங்கள் மாகாண விஷயங்கள் என்றும், வரையறுக்கவேண்டியது மிக்க அவசியம். இந்திய ஐக்கிய அரசியலிலும், மேலே கண்டபடி விஷயங்கள் வரையறுக்கப்பட்டிருக்கின்றன. ஆனல் சில விஷயங்கள் இரண்டு கவர்ன்மெண்டுக்கும் சம்பந்தப்பட்டதாக இருக்கிறபடியால், கண்டிப்பாய் இரண்டுபிரிவாக வரையறுக்க முடியாமல் எல்லா விஷயங்களும் அடியிற்கண்டபடி மூன்று பிரிவாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன.

a. ஐக்கிய சம்பந்தமான விஷயங்கள். இவைகள் சம்பந்தமான நிர்வாகமும், சட்டதிட்டங்கள் ஏற்படுத்தும் அதிகாரமும் ஐக்கிய கவர்ன்மெண்டாருக்குறியது. இவைகளில் மாகாண கவர்ன்மெண்டார் தலையிடக்கூடாது.

b. மாகாண சம்பந்தமான விஷயங்கள். இவைகள் சம்பந்தமான நிர்வாகமும் சட்டதிட்டங்கள் ஏற்படுத்தும் அதிகாரமும்

மாகாண சர்க்காருக்குறியது. இவைகளில் ஐக்கிய சர்க்கார் தலையிடக்கூடாது.

c. இரண்டு சர்க்காருக்கும் சம்பந்தமான விஷயங்கள்(concurrent subjects). இவைகள் சம்பந்தமாக இரண்டு சர்க்காருக்கும் அதிகாரம் உண்டு.

84. ஐக்கிய சர்க்காருக்குறிய விஷயங்களில் முக்கியமானவைகளாவன:—

ராணுவம், கப்பற்படை, ஆகாயக்கப்பல், வெளிநாட்டு விஷயங்கள், நாணயம், நாணயச்சிலாவணி, தந்தி, தபால், டெலிபோன், பாங்கிகள், சுங்கம், உப்புவரி, வருமானவரி முதலியவை.

மாகாண சர்க்காருக்குறிய விஷயங்களில் முக்கியமானவைகளாவன:—

அமைதி, மாகாணக்கோர்ட்டுகள், போலீஸ், ஜெயில்கள், ஸ்தலஸ்தாபனம், சுகாதாரம், கல்வி, நிலம்,நிலவரி, தண்ணீர், தண்ணீர்வரி, காடுகள், மீன் வியாபாரம், தொழில்வரி முதலியவை.

இரண்டு சர்க்காருக்கும் பொதுவாக உள்ள விஷயங்களில் முக்கியமானவைகளாவன:—

சீவில் கிரிமினல் வியவகாரங்கள் நடத்தும் முறை சம்பந்தமான சட்டங்கள், சாக்ஷியம் சம்பந்தமான சட்டம், விவாகம், விவாகரத்து, சுவீகாரம், பஞ்சாயத்து முதலியவை.

85 சில விஷயங்கள் சம்பந்தமாக இரண்டு சர்க்காருக்கும் அதிகாரம் கொடுக்கப்பட்டிருப்பதனல், ஷை விஷயங்களின் நிர்வாகத்திலோ, அல்லது சட்டதிட்டங்கள் ஏற்படுத்துவதிலோ, ஷை இரண்டு சர்க்காருக்குள் சச்சரவு ஏற்படலாம். ஷை சச்சரவை விலக்குவதற்காக அடியிற்கண்ட விதிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன:—

a. மாகாண சட்டசபையால் ஏற்படுத்தப்பட்ட சட்டங்களும், ஐக்கிய சட்டசபையால் ஏற்படுத்தப்பட்ட சட்டங்களும் பரஸ்பர விருத்தமாகயிருந்தால், ஐக்கிய சட்டசபை செய்த சட்டங்களே அமுலுக்குக் கொண்டுவரத்தக்கது.

ஆனால் மாகாண சட்டசபையில் தீர்மானிக்கப்பட்ட சட்டம் கவர்னர் அவர்களால் ஒப்புக்கொள்ளப்படாமல் கவர்னர்ஜெனரல் அவர்கள் அபிப்பிராயத்திற்கோ, அல்லது சக்கிரவர்த்தி அவர்களின் அபிப்பிராயத்திற்கோ, நிறுத்திவைக்கப்பட்டு அவர் சம்மதி கொடுத்துச்சட்டமாக்கப்பட்டிருந்தால் அது ஐக்கிய சட்டத்துக்கு விருத்தமாக யிருந்தாலும் செல்லக்கூடியது.

b. நிர்வாக சம்பந்தமாக பரஸ்பர விருத்தம் ஏற்படக்கூடியதில்லை. ஏனெனில் கூடி பொது ஜாப்தாவில் (concurrent list) கண்ட விஷயங்களின் நிர்வாகம் சாதாரணமாக மாகாண கவர்ன்மெண்டுகளைப் பொறுத்ததாகயிருக்கிறது. ஐக்கிய சட்டசபையில் ஏற்படுத்தப்படும் சட்டங்களை அமுலுக்குக் கொண்டுவரவேண்டியது மாகாணங்களின் பொறுப்பு. எந்தச்சட்டங்களை மாகாணங்கள் அமுலுக்குக் கொண்டு வரத் தயாராக யிருக்கின்றனவோ அவைகளைத்தான் ஐக்கியசட்டசபை ஏற்படுத்தும்.

86. சட்டசபைகள் சட்டங்கள் ஏற்படுத்துவதில் சில நிர்ப்பந்தங்கள் உண்டு.

a. சக்கிரவர்த்தி அல்லது அவருடைய குடும்பத்தாருடைய பாத்தியங்களை பாதிக்கக்கூடிய சட்டங்கள், இன்னார்கள் பிரிட்டிஷ் பிரஜைகள் என்று தற்காலத்தில் அமுலிலிருக்கும் சட்டத்தை பாதிக்கக்கூடிய சட்டங்கள், ராணுவம், கப்பற்படை, ஆகாயக்கப்பற்படை இவைகள் சம்பந்தமான ஆக்டுகளை பாதிக்கக்கூடிய சட்டங்கள், இவைகளை ஏற்படுத்த அதிகாரமில்லை.

b. 1935-ம் வருஷத்து கவர்ன்மெண்ட் ஆப் இந்தியா ஆக்ட், அதையனுசரித்து சக்ரவர்த்தி அவர்களாலோ, அல்லது இந்தியா செக்ரடெரியாலோ, அல்லது கவர்னர்ஜெனரல் அவர்களாலோ, அல்லது கவர்னர் அவர்களாலோ ஏற்படுத்தப்பட்ட ஆர்டர்கள், விதிகள் இவைகள் யாதொன்றையும், அந்த ஆக்ட், ஆர்டர் அல்லது விதிகளில் கண்டிருக்கிறமட்டில் மாறுதல் செய்யலாமே யொழிய வேறு விதமான மாறுதல்கள்செய்ய யாதொரு அதிகாரமுமில்லை.

87. ஐக்கியசட்டசபையில், கவர்னர்ஜெனரல் அவர்களின் முன் அனுமதியில்லாமல், அடியிற்கண்ட விஷயங்கள் சம்பந்தமாக மசோதாக்கள் பிரவேசனம் செய்யமுடியாது:—

1. இங்கிலீஷ் பார்லிமெண்டாரால் செய்யப்பட்ட ஆக்ட், கவர்னர்ஜெனரலின் ஆக்ட், கவர்னரின் ஆக்ட், அல்லதுமேற்படியார்கள் வெளிப்படுத்திய அவசரச்சட்டங்கள் இவைகளை ரத்துசெய்ய அல்லது திருத்தம்செய்ய அல்லது இவைகளுக்கு விருத்தமான சட்டங்கள்.

2. மந்திரிகளுக்கு மாற்றப்படாத இலாகாக்களையாவது, எல்லைப்புரப் பிரதேசங்களையாவது, பிரிட்டிஷ் பலுசிஸ்டான் மாகாணத்தையாவது, பாதிக்கக்கூடிய சட்டங்கள்.

3. இந்தியாவின் நாணயம்,நாணயச்சிலாவணி,இந்திய ரிசர்வ் பாங்கியின் அமைப்பு, அதின் கடமைகள், இவைகளை பாதிக்கக்கூடிய சட்டங்கள்.

4. போலீஸ் சம்பந்தமான ஆக்டுகளை ரத்துச்செய்ய அல்லது திருத்தம்செய்ய அல்லது பாதிக்கக்கூடிய சட்டங்கள்.

5. ஐரோப்பிய பிரிட்டிஷ் பிரஜைகளின்பேரில் கிரிமினல் கேஸ் நடத்தும்முறையை பாதிக்கக்கூடிய சட்டங்கள்.

88. மாகாண சபையிலும் மேலேகண்ட விஷயங்களில், கவர்னரின் ஆக்ட் அல்லது அவசரச் சட்டம் தவிர மற்ற எல்லா விஷயங்கள் சம்பந்தமாக மசோதாக்கள் பிரவேசனம் செய்வதற்குமுன் கவர்னர்ஜெனரலுடைய முன் அனுமதி வேண்டும். மேலும் இதனடியிற்கண்ட மசோதாக்கள் சம்பந்தமாக கவர்னர் அவர்களின் முன் அனுமதியும் வேண்டும்.

1. கவர்னர் அவர்களின் ஆக்ட் அல்லது அவசரச்சட்டத்தை ரத்துச்செய்ய அல்லது திருத்தம்செய்ய அல்லது பாதிக்கக்கூடிய சட்டங்கள்.

2. போலீஸ் சம்பந்தமான ஆக்டுகளை ரத்துச்செய்ய அல்லது திருத்தம் செய்ய அல்லது பாதிக்கக்கூடிய சட்டங்கள்.

# அத்தியாயம் 14.

## விவேசனம் செய்யும் சட்டங்கள்.

## (discriminatory legislation)

89. ஒரு சட்டசபைக்கு எல்லா விஷயங்கள் சம்பந்தமாகவும் சட்டம் ஏற்படுத்த அதிகாரம் கொடுத்தால், அந்த அதிகாரத்தை அச்சபை ஒழுங்காகவும் நியாயமானமுறையிலும் செலுத்தவேண்டுமேயொழிய பக்ஷபாதமான சட்டங்கள் ஏற்படுத்துவது முறையல்ல. தேசத்திலுள்ள எல்லா ஜனங்கள் பேரிலும் பக்ஷபாதமில்லாமல் பிரயோகிக்கத்தக்கவாறு சட்டங்கள் ஏற்படுத்தவேண்டுமேதவிற சிலர்களுக்கு மட்டும் சாதகமாகவும், மற்றவர்களுக்கு பாதகமாகவும் சட்டங்கள் ஏற்படுத்தக்கூடாது. மற்ற தேசங்களில் இன்னமாதிரி சட்டங்கள் ஏற்படுத்தக்கூடாது இன்னமாதிரி சட்டங்கள் ஏற்படுத்தலாம் என்று வரையறுக்கவில்லை. இங்கிலாந்திலும், மற்ற குடியரசு நாடுகளிலும், சட்டசபைகள் யாதொரு நிர்ப்பந்தமுமில்லாமல் எவ்வித சட்டங்களையும் ஏற்படுத்தலாம். ஆனால் இந்தியாவிலோ என்றால் பலகாரணங்களுக்காக, முக்கியமாக இந்தியர்களுக்குப் பூர்ணாதிகாரம் கொடுத்தால் அவர்கள் இங்கிலீஷ்காரர்கள் சம்பந்தமாக, நிர்ப்பந்தங்கள் ஏற்படுத்துவார்கள் என்ற பயத்தினால், இந்திய சட்டசபைகளைப் பலவித நிர்ப்பந்தங்களுக்கு உள்படுத்தப்பட்டிருக்கிறது. இவைகளை ஏற்படுத்தக்கூடாது என்று இந்தியர்கள் எவ்வளவோ முறையிட்டும் பயனில்லை. அவைகள் என்னென்ன என்று சுருக்கமாக ஆராய்வோம்.

a. இந்தியாவில் ஸ்திரமாகக் குடியிருப்பு வைத்துக்கொண்டிருக்கும் எந்தப்பிரிட்டிஷ் பிரஜையும் அவருடைய மதம், ஜாதி, பிறப்பு, பிறந்த இடம், அல்லது நிறம் இவைகள் வித்தியாசமாக யிருக்கிறது என்ற காரணத்தினால் மட்டும், பிரிட்டிஷ் இந்தியாவில் ஒரு உத்தியோகம் வகிக்கக்கூடாது, அல்லது வியாபாரம், தொழில் நடத்தக்கூடாது என்று யாதொரு சட்டங்களும், உத்திரவுகளும் ஏற்படுத்தக்கூடாது.

b. இங்கிலாந்து ஸ்காட்லெண்டு வடஐர்லாந்து இந்தப் பிரதேசங்களில் ஸ்திரமாகக்குடியிருக்கும் பிரிட்டிஷ் பிரஜைகள் இந்தியாவுக்குள் நுழையக்கூடாது என்று, யாதொரு சட்டமாவது உத்திரவாவது ஏற்படுத்தக்கூடாது. மேற்படியார்கள் இங்கிலாந்தில் குடியிருக்கிறார்கள் என்ற காரணத்தையிட்டாவது, மற்றப்படி அவர்களுடைய நிறம், இருப்பிடம், ஜாதி, மதம், பிறப்பு, பிறப்பிடம் முதலிய காரணத்தையுத்தேசித்தாவது, இந்தியாவில் உத்தியோகம் வகிக்கவோ, வியாபாரம் அல்லது தொழில் நடத்தவோ, அல்லது சொத்துக்களில் உரிமைகொண்டாடவோ கூடாது என்று, யாதொருசட்டமும் உத்திரவும் ஏற்படுத்தக்கூடாது. மேற்படியார்கள் இன்ன இடத்தில் தான் குடியிருக்கலாம், இந்த இடங்களுக்குத்தான் பிரயாணம் செய்யலாம் என்று சட்டம் ஏற்படுத்தக்கூடாது. மேற்படியார்களின் பேரில் மற்ற பிரிட்டிஷ் பிரஜைகள் பேரில் விதிக்கப்பட்டிருக்கும் வரியைவிட அதிகமாக வரி விதிக்கவும் அதிகாரமில்லை.

உதாரணமாக கெனியா என்னும் குடியேறிய நாட்டில் வெள்ளைக்காரர்கள் எந்தப் பிரதேசத்திலும் குடியிருக்கலாம். ஆனால் இந்தியர்கள் சில இடங்களில் குடியிருக்கக் கூடாது. தென் ஆப்ரிக்காவில் இந்தியர்கள் மட்டும் சில வரிகள்செலுத்த வேண்டும். இவ்வித நிர்ப்பந்தங்கள் இங்கிலாந்தில் இந்தியர் சம்பந்தமாக ஏற்படுத்தவில்லை. ஆகையால் இந்தியாவிலும் இங்கிலீஷ்காரர் சம்பந்தமாக யாதொரு நிர்ப்பந்தமும் ஏற்படுத்தக்கூடாது.

c. பிரிட்டிஷ் பிரஜைகள் சேர்ந்து ஏற்படுத்தப்பட்ட கம்பெனிகள், அவைகள் இங்கிலீஷ் கம்பெனி ஆக்டுப்படிப்பிணைக்கப்பட்டிருந்தாலும் சரி அல்லது இந்தியன் கம்பெனி ஆக்டுப்படிப்பிணைக்கப்பட்டிருந்தாலும்சரி, இந்தியாவில் தாராளமாக வியாபாரங்கள் செய்யலாம். அவைகளுக்கு இந்திய பிரிட்டிஷ் பிரஜைகள் கூடிய இந்திய கம்பெனிகளுக்கொப்பந்தம், எல்லா பாத்தியங்களும் உண்டு. அவைகள் சம்பந்தமாக யாதொரு விவேசனம் செய்யும் சட்டங்களாவது உத்திரவுகளாவது ஏற்படுத்தக்கூடாது.

இங்கிலாந்தில் மேற்கண்ட விஷயங்கள் சம்பந்தமாக இந்தியர்களையும் இந்திய கம்பெனிகளையும் நிர்ப்பந்தத்துக்குட்படுத்தினால்,

அப்பொழுது இந்தியாவும் இங்கிலீஷ்காரர்கள் பேரிலும் இங்கிலீஷ் கம்பெனிகள் பேரிலும் அதே நிர்ப்பந்தங்களை ஏற்படுத்தலாம்.

d. மேலேகண்ட விதிகளுக்கு ஒரு முக்கியமான விலக்கு உண்டு. இந்தியாவில் வியாபாரத்தையும், கைத்தொழிலையும்,விருத்தி செய்ய வேண்டுமென்ற எண்ணங்கொண்டு குறிப்பிட்ட வியாபாரம் அல்லது கைத்தொழில் நடத்திவரும் கம்பெனிக்கு சர்க்கார் பணத்திலிருந்து உதவிசெய்வதாயும், அந்த உதவிபெறவேண்டுமானல், அவைகள் இந்தியகம்பெனி ஆக்டுப்படி ஏற்படுத்தப்பட வேண்டும் என்றும், கம்பெனியின் டிரக்டர் ஸ்தானத்தில் சில இந்தியர்கள் இருக்கவேண்டுமென்றும், இந்தியர்களுக்கு வியாபாரம் அல்லது கைத்தொழில் கற்றுக்கொடுக்கவேண்டுமென்றும், நிபந்தனைகள் சட்டபூர்வகமாக ஏற்படுத்தலாம். அந்த நிபந்தனைகளுக்கு இங்கிலீஷ் கம்பெனிகளும் ஒப்புக்கொண்டால் அவைகளுக்கும் இந்திய கம்பெனிகளுக்கொப்பந்தம் சர்க்கார் உதவி அளிக்கவேண்டும். ஆனல் இந்த விதியும் ஏற்கனவே ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் இங்கிலீஷ் கம்பெனிகளைப்பாதிக்காது.

e. இங்கிலாந்தில் ரிஜிஸ்தராகியிருக்கும் கப்பல்கள் இந்தியாவில் தாராளமாக வியாபாரம் செய்யலாம். அவைகள் சம்பந்தமாக யாதொரு நிர்ப்பந்தமும் ஏற்படுத்தக்கூடாது.

இந்தியாவில் ரிஜிஸ்தராகியிருக்கும் கப்பல்கள் சம்பந்தமாக இங்கிலாந்தில் யாதொரு நிர்ப்பந்தமும் இல்லை.

90. மேலேகண்ட விதிகள் பரஸ்பரதர்மத்தை (reciprocity) அனுசரித்து ஏற்படுத்தியிருப்பதாக சர்க்கார் அதிகாரிகள் கூறுகிருர்கள். அதாவது இந்தியப்பிரஜைகள் சம்பந்தமாகவும், இந்திய கம்பெனிகள் இந்தியகப்பல்கள் சம்பந்தமாகவும், இங்கிலாந்தில் யாதொரு விதமான நிர்ப்பந்தமில்லை யென்றும் ஆகையினல் இந்தியாவிலும் இங்கிலீஷ்காரர்கள் சம்பந்தமாக அப்படிப்பட்ட நிர்ப்பந்தங்கள் ஏற்படுத்தக்கூடாது என்று தீர்மானிப்பது நியாயம் என்றும் சர்க்கார் அவர்களால் சொல்லப்படுகிறது. ஆனல் இங்கிலாந்தும் இந்தியாவும் சரிஜோடியில்லை யென்பதை இவர்கள் மறந்து விடுகிருர்கள். சென்ற 150 வருஷங்களாக இங்கிலீஷ்காரர்கள் இந்தியாவில்

வியாபாரம் நடத்தி வந்திருப்பதின் நிமித்தம் இங்கிலீஷ் வியாபாரம் இந்தியாவில் வேரூன்றியிருக்கிறது. அவர்களுடன் இந்தியர்கள் போட்டிபோடுவது இந்தியாவிலேயே மிக்க கஷ்டமாயிருக்கிறது. இந்த நிலைமையில் இந்தியர்கள் இங்கிலாந்தில் போய் இங்லீஷ்காரர்களுக்குச் சமமாக வியாபாரம் செய்துகொள்ளட்டும், ஆகையால் இங்கிலீஷ்காரர்களுக்கு இப்போது இருக்கும் உரிமைகள் சுதந்தரங்கள் ஒன்றும் குறைக்கக்கூடாது, எக்காலத்திற்கும் சாஸ்வதமாக இருக்கவேண்டியதுதான் என்று இங்கிலீஷ் சர்க்கார் சொல்லுவது நியாயமில்லை என்று இந்தியர்கள் வற்புறுத்தியும், பிரயோசனப்படவில்லை.

# அத்தியாயம் 15.

## ஐக்கியசர்க்கார், மாகாணசர்க்கார்கள், இவைகளின் வருமானமும் இவைகளுக்குள் பரஸ்பர சம்பந்தமும்.

**91.** ஒவ்வொரு அரசியலிலும் நிர்வாகத்துக்கு வேண்டிய துகைகள் குடிகளிடமிருந்து வரி மூலம் வசூலிக்கப்படுகிறது என்று எல்லாருக்கும் தெரிந்தவிஷயம். தற்காலத்தில் வரிவசூல் துகைகளில் சிலவற்றை இந்தியசர்க்காரும், சிலவற்றை மாகாண சர்க்காரும் அடைந்து வருகிறார்கள். சௌகரியத்தை உத்தேசித்து இவ்விதம் இன்ன இன்ன வரிகள் மாகாணத்திற்குச் சேரவேண்டியதென்றும், இன்ன இன்ன வரிகள் இந்தியசர்க்காருக்குச் சேரவேண்டும் என்றும் பிரிக்கப்பட்டிருக்கிறதேயொழிய சட்டப்படி எல்லாத்துகையும் இந்தியசர்க்காருக்குச் சேர்ந்ததே. ஆனால் இனிமேல் மாகாணங்கள் எல்லாம் பொறுப்பாட்சியுள்ள தனி வியக்திகளாகிவிட்டபடியால், ஐக்கியசர்க்காருக்கும் மாகாணங்களுக்கும் என்ன என்ன விஷயங்கள் சம்பந்தமாக வரி விதிக்கும் பாத்தியம் உண்டு என்று வியக்தமாகப் பிரித்துவிடுவது அவசியம். ஆதலால் அடியிற்கண்ட விதிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

௧. எந்தெந்த விஷயங்கள் சம்பந்தமாக சட்டங்கள் ஏற்படுத்த ஐக்கிய சர்க்காருக்குத் தனித்த அதிகாரம் கொடுக்கப் பட்டிருக்கிற

தோ, அந்த விஷயங்கள் சம்பந்தமாக வரி வசூலிக்கும் பாத்தியம் ஐக்கிய சர்க்காரைச்சேர்ந்தது. மற்ற எல்லா விஷயங்கள் சம்பந்தமாக வரி வசூலிக்கும் பாத்தியம் மாகாணங்களைச்சேர்ந்தது.

b. ஷை விதிக்குச்சில விலக்கு விதிகள் உண்டு.

i. உப்புவரி, ஏற்றுமதிவரி, ஐக்கிய சர்க்கார் விதிக்கக்கூடிய தேசிய சொத்துவரி (excise), வருமானவரி, இவைகளில் ஓர் பாகம் ஐக்கிய சர்க்காரால் மாகாண சர்க்காருக்குப் பிரித்துக்கொடுக்கப்படும். எவ்வளவு என்பது சக்கிரவர்த்தி அவர்களின் உத்திரவு மூலம் தீர்மானிக்கப்படும்.

ii. இந்திய சர்க்கார் விதிக்கக்கூடிய ஸ்டாம்புவரி, இறந்தவர்களின் வாரீசுகளிடமிருந்து வசூலிக்கும்வரி, ரெயில்வே சம்பந்தமான சில வரிகள், இவைகள் பூருவையும் ஐக்கியசர்க்கார் மாகாணங்களுக்குக்கொடுத்து விடவேண்டும்.

92. எப்பொழுது மாகாணங்கள் தங்களுக்குள்ள அதிகாரங்கள் சிலவற்றை ஐக்கியசர்க்காருக்கு ஒப்புவித்து விட்டனவோ, அந்த அதிகாரங்கள் சம்பந்தப்பட்டமட்டில் மாகாண சர்க்கார்கள் ஐக்கியசர்க்காரின் உத்திரவுகளுக்குக் கட்டுப்படவேண்டியது அவசியம். மேலும், ஐக்கியசட்டசபைக்கு எந்த விஷயங்களைப்பொறுத்துச்சட்டதிட்டங்கள் ஏற்படுத்தத் தனித்த அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறதோ, அந்த விஷயங்களை எல்லா மாகாணங்களிலும் நிர்வகிக்கவும் அவை சம்பந்தமான சட்ட திட்டங்களை எல்லா மாகாணங்களிலும் ஊர்ஜிதத்துக்குக்கொண்டுவரவும் ஐக்கியசர்க்காருக்கு அதிகாரம் உண்டு.

93. ஐக்கிய சர்க்கார் மாகாணங்களில் தங்கள் நிர்வாகத்தைத் தாங்கள் நியமித்த உத்தியோகஸ்தர்கள் மூலம் நடத்திக்கொள்ளலாம், அல்லது மாகாண உத்தியோகஸ்தர்களைத் தங்களுடைய ஏஜண்டுகளாக நியமித்து நடத்திக் கொள்ளலாம். இது விஷயமாக மாகாண சர்க்காருக்கு ஏற்படும் செலவை ஐக்கிய சர்க்கார் பொறுத்துக் கொள்ளவேண்டும்.

94. மாகாணங்களின் தனித்த நிர்வாகத்துக்கு விடப்பட்ட

விஷயங்களின் நிர்வாகத்தால், ஐக்கிய சர்க்காருடைய தனித்த நிர்வாகத்துக்கு விடப்பட்ட விஷயங்களின் நிர்வாகம் பாதிக்கப்படுமானுல், மாகாணங்கள் எந்த விதமாகத் தங்கள் நிர்வாகத்தை நடத்த வேண்டுமென்று ஐக்கிய சர்க்கார், மாகாண சர்க்காருக்கு உத்திரவிடலாம். உதாரணமாக, மாகாணங்களில் உள்ள சில துறைமுகங்களில் ஆரோக்கியக்குறைவு இல்லாமல் பாதுகாத்துக்கொள்ள வேண்டிய பொறுப்பு ஐக்கிய சர்க்காரைச்சேர்ந்தது. ஒவ்வொரு மாகாணத்திலும் சுகாதார விஷயமான பொறுப்பு மாகாண சர்க்காரைச்சேர்ந்தது. மாகாணத்தில் மாகாண சர்க்கார் சுகாதார விஷயமாகச் செய்திருக்கும் ஏற்பாடுகள் திருப்திகரமாகயில்லாதிருந்து, அதனுல் ஷை துறைமுகத்தின் சுகாதாரம் பாதிக்கக் கூடுமென்று ஐக்கிய சர்க்கார் அபிப்பிராயப்படும்பக்ஷத்தில், ஷை விஷயமாக ஐக்கிய சர்க்கார் மாகாணசர்க்காருக்குக் கட்டளைகள் பிறப்பிவிக்கலாம்.

95. தேசத்தின் அமைதியையும் சாந்தத்தையும் பாதுகாக்கும் பொருட்டு ஐக்கிய சர்க்கார் மாகாண சர்க்கார்களுக்கு உத்திரவுகள் பிறப்பிவிக்கலாம்.

96. ஐக்கிய சர்க்காருக்கும் மாகாண சர்க்காருக்கும் ஏற்படக்கூடிய தகரூர்களையும், மாகாண சர்க்கார்களுக்குள் ஏற்படக்கூடிய தகரூர்களையும் தீர்ப்பதற்குச் சில விஷயங்கள் சம்பந்தமாக பெடரல் கோர்ட் என்ற ஹைகோர்ட்டுக்கும், மற்ற விஷயங்கள் சம்பந்தமாக கவர்னர் ஜெனரல் அவர்களால் ஏற்படுத்தப்பட்ட ஸ்பெஷல் பஞ்சாயத்துக்கோர்ட்டுக்கும் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

## அத்தியாயம் 16.

### நியாயஸ்தலங்கள், ரெயில்வே நிர்வாகம், முதலியன.

97. தற்காலம் அநேகமாக ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஒவ்வொரு ஹைகோர்ட்டு அல்லது சீப் கோர்ட்டு இருக்கிறது. இந்தக்கோர்ட்டுத் தீர்ப்பின்பேரில், சில கேஸ்கள் சம்பந்தப்பட்டமட்டில் சீமையிலிருக்கும் பிரிவிகவுன்ஸிலுக்கு அப்பீல் உண்டு. புதிய அரசியலில் அடியிற்கண்ட மாறுதல்கள் ஏற்படும்:—

a. இப்பொழுது இருப்பதுபோலவே ஒவ்வொரு மாகாணத்துக்கும் ஒரு ஹைகோர்ட் இருப்பதுடன் ஒரு சமஷ்டி ஹைகோர்ட்டும் (Federal Court) ஏற்படுத்தப்படும்.

சமஷ்டி அல்லது ஐக்கிய அரசியலில் விஷயங்களும் அதிகாரங்களும் ஐக்கிய சர்க்காருக்கும் மாகாண சர்க்காருக்கும் பிரித்துக் கொடுக்கப்பட்டிருப்பதாலும், ஒருவருடைய விஷயங்களில் மற்றவர் தலையிட பாத்தியமில்லாததாலும், அப்படித் தலையிட்டு ஏதாவது சட்டங்கள் ஏற்படுத்தினால் அந்தச் சட்டங்கள் செல்லாததாகையாலும் மேற்படி விஷயங்களைப் பொறுத்துத் தீர்ப்புச்சொல்வதற்கும், சட்டசம்பந்தமான விஷயங்களில் தீர்ப்புச் சொல்வதற்கும் மேற்படி பெடரல் கோர்ட்டுக்குத் தனித்த அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. பெடரல் கோர்ட்டின் சில தீர்மானங்களின் பேரில் சீமையிலிருக்கும் பிரிவி கவுன்ஸிலுக்கு அப்பீல் உண்டு.

b. மேற்படி பெடரல் கோர்ட்டு இரண்டு பிரிவாகப் பிரிக்கப்படும். ஒரு பிரிவு மேலே (a) பாராவிற்கண்ட விஷயங்கள் சம்பந்தமாகத் தீர்மானம் செய்யும். மற்றொன்று மாகாணங்களிலுள்ள ஹைகோர்ட்டுகள் செய்யும் சில தீர்ப்புகளின்பேரில் மனுக்களை விசாரித்து, அப்பீல் தீர்மானம் செய்யும்.

c. ஷை பெடரல் ஹைக்கோர்ட்டுக்கு மொத்தம் 6 ஜட்ஜ்கள் நியமிக்கப்படுவார்கள். 65 வருஷம் வரை அவர்கள் வேலை பார்க்கலாம். அவர்களுடைய சம்பளம், பென்ஷன் முதலியவைகளை சக்கிரவர்த்தி அவர்கள் தீர்மானம் செய்வார்.

98. தற்காலத்தில் இந்திய ரெயில்வேக்கள் அடியிற்கண்ட விதமாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன.

a. சர்க்காருக்குப் பாத்தியப்பட்டு, சர்க்கார் மானேஜ்செய்து வரும் பாதைகள், உதாரணம்:—ஈ. ஐ. & ஜீ. ஐ. பி. ரெயில்வேக்கள்.

b. சர்க்காருக்கு பாத்தியப்பட்டு, பிரைவேட் கம்பெனிகள் மானேஜ்செய்துவரும் பாதைகள். உதாரணம்:—எஸ். ஐ. & எம். எஸ் எம். ரெயில்வேக்கள்.

c. பிரைவேட் கம்பெனிகளுக்குப் பாத்தியப்பட்டு ஷை கம்பெனிகளாலோ, அல்லது சர்க்காராலோ, மானேஜ்செய்யப்படும் பாதைகள். உதாரணம்:—வங்காளம் & வடமேற்கு ரெயில்வே.

d. இந்திய சமஸ்தானங்களுக்குப் பாத்தியப்பட்ட ரெயில் வேக்கள். உதாரணம்:—மைசூர்ரெயில்வே.

e. ஜில்லா போர்டுகளுக்குச்சேர்ந்த ரெயில்வே. உதாரணம்:- திருநெல்வேலி திருச்செந்தூர் ரெயில்வே.

99. இந்தியரெயில்வே ஆக்டுப்படி, ஷை எல்லா ரெயில்வேக்களின் நிர்வாக சம்பந்தமாக சர்க்கார் அவர்களுக்குச்சில அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஷை அதிகாரத்தையும், சர்க்காரால் மானேஜ் செய்யப்பட்டு வரும் இருப்புப்பாதைகள் சம்பந்தமான மேல் விசாரணையையும் தற்காலம் ரெயில்வே போர்ட் என்ற அதிகாரிகள், கவர்னர் ஜெனரல் அவர்களின் நிர்வாக சபை மெம்பருக்கு உட்பட்டு நடத்திவருகிறார்கள். இந்த ரெயில்வே போர்டில் சாதாரண நிர்வாகத்திற்குத் தலைமை அதிகாரியாக ஒரு சீப் கமிஷனரும் பொருள் வருப்படி சம்பந்தமான விஷயங்களைக் கவனிப்பதற்கு ஒரு பைனான்ஷியல் கமிஷனரும் மூன்று மெம்பர்களும் இருக்கிறார்கள். ஷை போர்ட்டுக்குக் கீழ் பல அதிகாரிகளும் உண்டு.

ரயில்வே சம்பந்தமான வரவு சிலவு திட்டம் தற்காலம் இந்திய சட்டசபையில் ஓட்டுக்கு விடப்பட்டு, அதின் அனுமதியின் பேரில் ரெயில்வே சம்பந்தமான சிலவுகள் சிலவழிக்கப்படுகின்றன.

புதிய அரசியலில் அடியிற்கண்ட மாறுதல்கள் ஏற்படும்:—

a. ரெயில்வே மெம்பருக்குப் பதிலாக, ரெயில்வே அதாரிட்டி (Railway Authority) என்ற பெயருடன் 7 மெம்பர்கள் நியமிக்கப்படுவார்கள். இந்த ரயில்வே அதிகாரியை நாம் புதிய ரெயில்வே

போர்ட் என்று அழைப்போம். இதில் மூன்று மெம்பர்கள் கவர்னர் ஜெனரல் அவர்கள் யுக்தப்படிக்கும்,மற்ற நான்கு மெம்பர்கள் மந்திரிகளின் சம்மதத்தின் பேரிலும் நியமிக்கப்படுவார்கள். இவர்களுக்குள் ஒரு அக்கிராசனாதிபதி கவர்னர்ஜெனரல் அவர்களின் யுக்தப்படி நியமிக்கப்படுவார்.

b. ஷை மெம்பர்கள் 5 வருஷம் உத்தியோகம் வகிப்பார்கள். எல்லாருடைய ஸ்தானமும் ஒரேசமயத்தில் காலியாகாமலிருக்கும் பொருட்டு முதல் முதல் நியமுகம் செய்யப்படுகிறவர்களில் 3 மெம்பர்கள் மூன்றுவருஷத்துக்கும், 4 மெம்பர்கள் 5 வருஷத்துக்கும் நியமிக்கப்படுவார்கள். கவர்னர்ஜெனரல் அவர்கள், மந்திரிகளைக் கலந்து கொண்டு, எந்த மெம்பரையும் சரியான காரணத்துக்காக நீக்கிவிடலாம்.

c. ஷை ரெயில்வே அதிகாரிக்குக் கீழ்ப்பட்டு ரெயில்வே சம்பந்தமான விஷயங்களை நிர்வகிப்பதற்காக ஒரு சீப் கமிஷனரும், பொருளாதார விஷயங்களைக்கவனிப்பதற்கு ஒரு பைனான்ஷியல் கமிஷனரும், மற்ற உதவி கமிஷனர்களும் நியமிக்கப்படுவார்கள். புதிய ரெயில்வே போர்டையும், மந்திரிகளையும் கலந்துகொண்டு கவர்னர் ஜெனரல் அவர்கள் சீப் கமிஷனரை நியமிப்பார்.

மந்திரிகளின் சம்மதத்தின்பேரில் கவர்னர் ஜெனரல் அவர்கள் பைனான்ஷியல் கமிஷனரை நியமிப்பார். உதவி கமிஷனர்கள் சீப் கமிஷனரின் சிபார்சின்பேரில், புதிய ரெயில்வே போர்டால் நியமிக்கப்படுவார்கள். உதவி கமிஷனர்களை ரெயில்வேபோர்ட் வேலையிலிருந்து நீக்கலாம். கவர்னர் ஜெனரல் அவர்கள் மந்திரிகளைக் கலந்து அதற்குப்பிறகு சம்மதம்கொடுத்தால் சீப் கமிஷனரை புதிய ரெயில்வே போர்ட் வேலையிலிருந்து நீக்கலாம். பைனான்ஷியல் கமிஷனரை கவர்னர் ஜெனரல் அவர்கள் மந்திரிகளின் சம்மதத்தின் பேரில் நீக்கலாம்.

d. புதிய ரெயில்வே போர்ட் ரெயில்வே அதிகாரத்தை நடத்தும் முறையைப்பற்றிமட்டும் (questions of policy) ஷை ரெயில்வே போர்டுக்குக்கட்டளைகள் பிறப்பிக்க மந்திரிகளுக்கு அதிகாரம்

உண்டு. அவைகளை அனுசரித்து ரெயில்வேபோர்ட் நடக்கவேண்டும். மற்ற விஷயமாக மந்திரிகளுக்கு ரெயில்வே நிர்வாகத்தில் தலையிட அதிகாரமில்லை.

e. ரெயில்வே போர்டின் நிர்வாகத்துக்கு விடப்பட்டிருக்கும் விஷயங்கள் மந்திரிகளின் நிர்வாகத்துக்கு விடப்பட்டிருந்தால் மந்திரிகளின் யோசனைக்கு விரோதமாக எந்தெந்த விஷயங்களில் கவர்னர் ஜெனரல் அவர்கள் உத்திரவுகள் பிறப்பிவிக்கலாமோ, அந்தந்த விஷயங்களில் (முக்கியமாக கவர்னர் ஜெனரல் அவர்களின் விசேஷப்பொறுப்புகள் சம்பந்தமாக) ரயில்வே போர்டின் யோசனைக்கு மாருக கவர்னர்ஜெனரல் அவர்கள் உத்திரவுகள் பிறப்பிவிக்கலாம்.

f. ரெயில்வே சம்பந்தமான வரவு சிலவு திட்டம் ரயில்வே போர்டால் தயாரிக்கப்பட்டு அவைகள் மந்திரிகளுக்கு அனுப்பப்பட்டு,மந்திரிகளால் ஐக்கிய சட்டசபையில் சமர்ப்பிக்கப்படும். ஆனால் ஷெ சிலவுகள் சிலவிடுவதற்கு சட்ட சபையின் சம்மதம் (ஓட்டு) தேவையில்லை. ரெயில்வே சம்பந்தமான சிலவுக்கு ரெயில்வே வரும்படி போதாமல், முதல் தொகையிலிருந்தோ அல்லது ஐக்கிய சர்க்காரின் இதரவரும்படியிலிருந்தோ சிலவுசெய்ய வேண்டியிருந்தால் மட்டும் சட்ட சபையின் ஓட்டு தேவை.

g. ரெயில்வேக்களை நடத்தும் முறையைப்பற்றி ஆலோசனை செய்வதற்காக ரெயில்வே போர்டு மீட்டிங்கை ரெயில்வே இலாகா மந்திரி கூட்டுவிக்கலாம். அந்த மீட்டிங்கில் மந்திரி அக்கிராசனம் வகிப்பார்.

# அத்தியாயம். 17

## இந்திய நிர்வாக உத்தியோகஸ்தர்கள். (Services)

100. தற்காலம் அடியிற்கண்ட உத்தியோகஸ்தர்கள் சர்க்கார் சம்பந்தமான எல்லா இலாகாக்களிலும் வேலைகளை நிர்வகித்து வருகிறார்கள்.

1. இந்தியா செக்ரடெரி அவர்களால் நியமிக்கப்படும் உத்தி யோகஸ்தர்கள்:—

a. இந்தியன் சிவில் சர்விஸ் உத்தியோகஸ்தர்கள்
b. ,, போலீஸ் ,,
c. இந்தியன் காட்டு (forest) ,,
d. ,, இன்ஜினீரிங் (இர்ரிகேஷன் உள்பட),,
e. ,, கல்வி ,,
f. ,, மிருகவைத்திய (veterinary) ,,
g. ,, விவசாய ,,
h. ,, வைத்திய ,,

i. இந்திய ரெயில்வேக்கள், இந்திய தந்தி & தபால் இலாகா, சுங்க இலாகா, இவைகளில் சில தலைமை உத்தியோகஸ்தர்களும் மத்திய சர்க்கார் ஆபீஸில் (Central Secretariat) சில முக்கிய உத்தி யோகஸ்தர்களும்.

2. இந்தியா கவர்ன்மெண்டின் இதர நிர்வாக உத்தியோகஸ் தர்கள், இந்தியா கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்படுகிறார்கள். ஒவ்வொரு மாகாணத்திலும், மேலே 1வது வகுப்பில் சொல்லப் பட்ட உத்தியோகஸ்தர்கள் தவிர மற்ற உத்தியோகஸ்தர்கள் மாகாண கவர்ன்மெண்டுகளால் நியமிக்கப்படுகிறார்கள்.

புதிய அரசியலில் மாகாணங்களில் சுயேச்சாதிகாரம் ஏற்படுத்தி எல்லாவிஷயங்களையும் மந்திரிகளின் நிர்வாகத்துக்குவிட்டு அவைகளை மந்திரிகள் நிர்வகிக்கவேண்டுமென்றால் மாகாணத்தில் உத்தியோகம் வகிக்கும் எல்லா உத்தியோகஸ்தர்களையும் மந்திரிகள் நியமிக்கவும் நீக்கவும் மந்திரிகளுக்கு அதிகாரம் கொடுக்கப்படவேண்டும். அப்ப டி அதிகாரம் இல்லாவிட்டால் மாகாணங்களுக்கு சுயேச்சாதிகாரம் கொடுத்ததாக ஏற்படாது. இதையுத்தேசித்துத்தான் புது அரசிய லில் மாகாண உத்தியோகஸ்தர்கள் எல்லோர்பேரிலும் மந்திரிகளுக் குப் பூர்ண அதிகாரம் கொடுக்கவேண்டுமென்று இந்தியர்கள் வற்

புறுத்தினூர்கள். ஆனல் பிரிட்டிஷ்சர்க்கார் இதற்கு இணங்கவில்லை. இந்தியன் சிவில் சர்விஸ், இந்தியன் போலீஸ் சர்விஸ் இந்த இரண்டு சர்விஸ்களைத்தவிற மற்ற மேலே 100வது பாராவில்கண்ட எல்லா உத்தியோகஸ்தர்களையும்,புதிய ஐக்கிய கவர்ன்மெண்டாரும்,மாகாண கவர்ன்மெண்டாரும் நியமிக்க அதிகாரம் உண்டு. ஆனல் இந்தியன் போலீஸ் சர்விஸ்,இந்தியன் சிவில் சர்விஸ் இந்த இரண்டு வகுப்பைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்கள், புது அரசியல் அமுலுக்குவந்து கொஞ்சம் வருஷம்வரை தற்கால நடப்பைப்போலவே இந்தியா செக்ரடெரி அவர்களால் நியமிக்கப்படவேண்டும் என்றும், ஷை இரண்டு சர்விஸைச்சேர்ந்த உத்தியோகஸ்தர்கள் தங்கள் கடமையைச் சரிவரச் செய்துவந்தால்த்தான் அரசியல்முறையே சரியாக நடைபெறும் என்றும், இவர்களின் நியமுகம் சம்பந்தமான முறையை இப்பொழுது மாற்றினல் ஷை உத்தியோகத்துக்கு லாயக்காக உள்ளவர்கள் கிடைப்பது கஷ்டமாகிவிடும் என்றும், அதனல் இந்திய ராஜீய நிர்வாகத்துக்கே ஊழல் வந்துவிடும் என்றும், புதிய அரசியல் அமுலுக்கு வந்து, சுயேச்சாதிகாரமுள்ள மாகாண கவர்ன்மெண்டுகள், புதிய அரசியல் திட்டத்தை எந்தமட்டில் நிறைவேற்றுகிறுர்கள் என்று தெரிந்ததின்மேல் ஷை இரண்டு சர்விஸ்கள் சம்பந்தமான உத்தியோகஸ்தர்களின் நியமுகமுறையை மாற்றுவதைப்பற்றி விசாரிக்கலாம் என்றும், தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

புதிய அரசியல் திட்டம் அமுலுக்கு வந்து ஐந்து வருஷம் கழிந்து இந்த விசாரணை ஏற்படுத்தவேண்டும் என்று வெள்ளையறிக்கையில் கண்டிருந்தது. ஆனல் கூட்டுக்கமிட்டியறிக்கையில் 5 வருஷம் என்று ஒரு வாயிதா இப்பொழுதே நிர்ணயித்து விடக்கூடாது என்றும், ஷை விசாரணை ஏற்படுத்துவதற்குத் தக்க சமயம் வந்துவிட்டதா, அல்லது இல்லையா என்று தீர்மானிக்க கவர்ன்மெண்டாருக்கு அதிகாரம் இருக்க வேண்டுமென்றும் அபிப்பிராயப்பட்டார்கள். இந்த அபிப்பிராயத்தைத்தான் இந்தியா கவர்ன்மெண்ட் ஆக்டில் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது.

தற்காலம் இந்தியன் சிவில் சர்விஸில் இங்கிலீஷ் உத்தியோகஸ்தர்களும் இந்திய உத்தியோகஸ்தர்களும், சரிக்குச் சரியாகவும்,

இந்தியன்போலீஸ் சர்விஸில் 5 இங்கிலீஷ் உத்தியோகஸ்தர்களுக்கு; மூன்று இந்திய உத்தியோகஸ்தர்கள் வீதமும் நியமிக்கப்பட்டு வருகிறார்கள். மொத்தம் உத்தியோகஸ்தர்களில் 100க்கு 20 வீதம் கீழ் உத்தியோகஸ்தர்களிலிருந்து பிரமோஷன் (promotion) பேரில் நியமிக்கப்படுகிறார்கள். இந்தியன் சிவில் சர்விஸ் உத்தியோகஸ்தர்கள் தற்காலம் மாகாணங்களில் கலெக்டர்கள், சப்கலெக்டர்கள்,அஸிஸ்டெண்ட் கலெக்டர்கள், கவுன்ஸில் மெம்பர்கள், ரெவின்யூபோர்ட் மெம்பர்கள், கவர்ன்மெண்ட் செக்ரடரிகள், முதலிய உத்தியோகம் வகிக்கிறார்கள். இந்தியன் போலீஸ் சர்விஸ் உத்தியோகஸ்தர்கள் அடியிற்கண்ட உத்தியோகங்கள் வகிக்கிறார்கள்:— இன்ஸ்பெக்டர் ஜெனரல் அப் போலீஸ், டெப்டி இன்ஸ்பெக்டர் ஜெனரல், போலீஸ் கமிஷனர், போலீஸ் சூபரின்டென்டென்ட், டெப்டி போலீஸ் சூபரின்டென்டென்ட், அஸிஸ்டெண்டு போலீஸ் சூபரின்டென்டெண்ட்.

101. இந்தியன் இற்றிகேஷன் (irrigation) சர்விஸ் அதாவது நீர்ப்பாய்ச்சுதல் சம்பந்தமான இன்ஜினீர்கள், இனி ஒவ்வொரு மாகாணத்திலும் அந்த கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்படுவார்கள். தற்கால வழக்கத்தைப் போலவே இங்கிலீஷ்காரரும், இந்தியர்களும் நியமிக்கப் படுவார்கள். அவ்விதம் நியமிக்கும் அதிகாரத்தை மாகாண கவர்ன்மெண்டுகளுக்குக் கொடுத்திருப்பது மூலம், சரியான லாயக்குள்ளவர்கள் ஷை உத்தியோகத்துக்கு வாராமலிருந்து, அதனால் அந்த மாகாணத்துக்குக்கெடுதி ஏற்படும் பக்ஷத்தில் ஷை உத்தியோகஸ்தர்களை நியமுகம்செய்யும் அதிகாரத்தை இந்தியா செக்ரடெரி மாகாண கவர்ன்மெண்டுகளிடமிருந்து, வாபிஸ் வாங்கித்தன்னிடமே நிறுத்திக்கொள்ளலாம்.

இந்த ஏற்பாடு முக்கியமாக சிந்து மாகாணத்தையுத்தேசித்துச் செய்யப்பட்டிருக்கிறது. நமது மாகாணத்தில் இதற்கு அவசியமில்லை.

இந்தியன் மெடிகல் சர்விஸ் உத்தியோகஸ்தர்களும், தற்காலம் போல இந்தியா செக்ரடெரி அவர்களால் நியமிக்கப்படுவார்கள். இந்த உத்தியோகஸ்தர்கள், ராணுவத்தில் இருக்கும் பிரிட்

டிஷ் அதிகாரிகளுக்குத் தேவையான சமயங்களில் சிகிச்சைசெய்வ தற்காகவென்றே ஆரம்பத்தில் ஏற்படுத்தப்பட்டார்கள். இவர் களில் பெரும்பாலர் ராணுவத்தில் உத்தியோகம் வகித்து வருகிறார் கள். சிறுபாலர் மட்டும் சிவில் உத்தியோகங்களில் வேலைபார்த்து வரும் பிரிட்டிஷ் அதிகாரிகளுக்குச் சிகிச்சைசெய்யும் பொருட்டு மாகாணங்களில் பல ஜில்லாக்களில், ஜில்லா மெடிகல் ஆபீசர்களாக யிருக்கிறார்கள். புதிய அரசியலிலும் இத்தகைய உத்தியோகஸ்தர் கள் சிலர் ஒவ்வொரு மாகாணத்திலும், அந்தந்த மாகாண பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்களின் சிகிச்சைக்காக நியமிக்கப்படவேண்டும் என்று ஆக்டில் சொல்லப்பட்டிருக்கிறது.

102. இந்திய ரெயில்வேக்களில் எல்லா உத்தியோகங்களு க்கும், உத்தியோகஸ்தர்கள் நியமுகம் செய்யவேண்டிய அதிகாரம் புதிய ரெயில்வே போர்டுக்குக்கொடுக்கப்பட்டிருக்கிறது. ஹைகோர்ட் பெடரல்கோர்ட்டு, இவைகளின் உத்தியோகஸ்தர்கள் அந்தந்த சீப் ஜஸ்டிஸ் அவர்களால் பப்ளிக் சர்விஸ் கமிஷனர்களைக்கலந்துகொண்டு நியமிக்கப்படுவார்கள்.

103. இந்திய செக்ரடேரியால் நியமிக்கப்படும் உத்தியோகஸ் தர்களுக்கும், ஐக்கிய கவர்ன்மெண்டாராலும், மாகாண கவர்ன் மெண்டுகளாலும், நியமுகம் செய்யப்படும் உத்தியோகஸ்தர்களுக் கும்,அவர்களுடைய உரிமைகள் சம்பந்தமாகச் சில வித்தியாசங்கள் உண்டு. அவைகளில் முக்கியமானவைகளை மட்டும் நாம் சுருக்கமாய்க் கூறுவோம்.

a. இந்தியா செக்ரடேரி அவர்களால் நியமிக்கப்படும் உத்தியோ கஸ்தர்களுக்கென்றே சில உத்தியோகங்கள் ஏற்படுத்தப்பட் டிருக்கின்றன. அந்த உத்தியோகங்களுக்கு வேறு உத்தியோகஸ் தர்களை நியமிக்கக்கூடாது. அந்த உத்தியோகங்களை மூன்று மாதங் களுக்குமேல் காலியாகவைக்கக்கூடாது.

b. புதிய அரசியலில் மந்திரிகளால் ஏற்படுத்தப்படும் உத்திரவு கள் ஷை உத்தியோகஸ்தர்களின் உத்தியோக உரிமைகளைப் பாதிக் கக்கூடியது என்று ஷை உத்தியோகஸ்தர்கள் அபிப்பிராயப்பட்டு

அந்த விஷயத்தை கவர்னர் அல்லது கவர்னர்ஜெனராலுக்குத் தெரிவித்தால் கவர்னர் அல்லது கவர்னர்ஜெனரல் அவர்கள் ஷை விஷயத்தைப் பரிசீலனை செய்யவேண்டும்.

c. கவர்னர் அல்லது கவர்னர் ஜெனராலுடைய சம்மதம் இல்லாமல் ஷை உத்தியோகஸ்தர்களின் உரிமைகளைக் குறைக்கவோ, அல்லது அவர்களுக்கு அபராதம், தண்டனை முதலியது விதிக்கவோ, மந்திரிகளுக்கு அதிகாரமில்லை.

d. அப்படி கவர்னர் அல்லது கவர்னர் ஜெனராலுடைய சம்மதத்தின்பேரில், மேற்கண்ட உத்திரவு போடப்பட்டாலும், அதின் பேரில் இந்தியா செக்ரடெரிக்கு அப்பீல் செய்துகொள்ளலாம். இந்தியா செக்ரடெரியின் உத்திரவே முடிவான உத்திரவு.

e. ஷை உத்தியோகஸ்தர்களின் உரிமைகளைப் பாதுகாப்பதற்கென்றே, இந்தியா செக்ரடெரிக்கு யோசனை சொல்லும்பொருட்டு 3 க்கு குறையாமல் 6 க்கு மேற்படாமல் அட்வைஸர்கள் நியமிக்கப்படுவார்கள். அவர்களின் மெஜாரிட்டியார் சம்மதமில்லாமல் ஷை உத்தியோகஸ்தர்களின் உரிமைகள் சம்பந்தமான ரூல்களை மாற்ற இந்தியா செக்ரடெரிக்கும் அதிகாரம் இல்லை.

f. மேற்படியார்களின் சம்பளம், அலவுன்ஸ், பென்ஷன் முதலியவைகள் இந்தியாவின் வரும்படியிலிருந்து சார்ஜ் பாத்தியமாகச் செலுத்தப்படவேண்டும். அவைகளைப்பற்றி ஓட்செய்ய இந்திய சட்டசபைகளுக்கு அதிகாரம் இல்லை.

g. ஷை உத்தியோகஸ்தர்களின் உரிமைகள் புதிய அரசியலில் குறைக்கப்பட்டதென்ற காரணத்தாலோ, அல்லது மற்ற காரணத்தாலோ, ஷை உத்தியோகஸ்தர்களுக்கு நியாயமாக நஷ்ட ஈடு கொடுக்கவேண்டுமென்று, இந்தியா செக்ரடெரி அவர்கள் அபிப்பிராயப்பட்டால், அந்தப்படி உத்திரவிட அவருக்கு பாத்திய முண்டு. ஷை நஷ்டஈட்டை இந்தியாவின் வரும்படியிலிருந்து இந்திய கவர்ன்மெண்டார்கள் செலுத்தவேண்டும்.

104. ஒவ்வொருமாகாணத்திலும், அந்த மாகாண நிர்வாகத்துக்கு வேண்டிய உத்தியோகஸ்தர்கள், சிப்பந்திகள் முதலியவர்கள் நியமுக விஷயமாக கவர்ன்மெண்டுக்கு ஆலோசனை சொல்வதற்கு ஒரு பப்ளிக் சர்விஸ் கமிஷன் (தற்காலம் நமது ராஜதானியில் இருக்கிறதுபோல்) நியமிக்கப்படும். ஐக்கிய சர்க்காரின் நிர்வாக உத்தியோகஸ்தர்கள், சிப்பந்திகள் முதலியவர்கள் நியமுகவிஷயமாக ஆலோசனை சொல்ல ஒரு ஐக்கிய பப்ளிக் சர்விஸ் கமிஷன் நியமிக்கப்படும். ஐக்கிய பப்ளிக் சர்விஸ் கமிஷனர்கள் இந்தியா செக்ரடெரியாலும், மாகாண பப்ளிக் சர்விஸ் கமிஷனர்கள் கவர்னர் அவர்களாலும் நியமிக்கப்படுவார்கள். சர்க்கார் உத்தியோகங்களுக்கு நியமுகம் செய்வதற்கு அபேக்ஷகர்களின் யோக்கியதாம்சத்தைப் பரிக்ஷிக்க ஏற்படுத்தப்படும் பரிக்ஷைகள் ஷை பப்ளிக் சர்விஸ் கமிஷனர்கள் நடத்துவார்கள். இது தவிர, புதிதாக சர்க்காரில் வேலையில் சேர விரும்புகிறவர்களைப் பொறுக்கியெடுக்கும் முறையைப்பற்றியும் உத்தியோகஸ்தர்களின் நியமுகம், மாற்றுதல், உயர்த்துதல், தண்டம் விதித்தல், இவைகள் சம்பந்தமான நியமனங்களைப்பற்றியும், அந்தந்த சர்க்கார் அந்தந்த பப்ளிக் சர்விஸ் கமிஷனர்களைக் கலந்துகொள்ள வேண்டும்.

# அத்தியாயம் 18.

## கடன்வாங்குதல், ஆடிட், முதலிய விஷயங்கள்.

105. தற்காலம் இந்தியாவுக்கு வெளியே கடன் வாங்க வேண்டுமென்றால், இங்கிலீஷ் பார்லிமெண்டாருடைய சம்மதத்துடன் இந்தியா செக்ரடெரி மட்டும் கடன் வாங்கலாம். இந்தியா கவர்ன்மெண்டாரும் மாகாண கவர்ன்மெண்டுகளும் இந்தியாவுக்குள் கடன் வாங்கலாம். அப்படி மாகாண கவர்ன்மெண்டுகள் கடன் வாங்குவதற்கும், இந்தியா கவர்மெண்டார் சம்மதிக்கவேண்டும். மேலும் சில குறிப்பிட்டவிஷயங்கள் சம்பந்தமான செலவுகளுக்காக மட்டும் அவ்விதம் கடன் வாங்கலாம்.

புதிய அரசியல் திட்டத்தில் அடியிற்கண்ட மாறுதல்கள் செய்

யப்பட்டிருக்கின்றன. இந்தியா செக்ரடெரியின் அதிகாரம் நீக்கப்பட்டிருக்கிறது. ஐக்கிய சர்க்கார் இந்தியாவிலோ, இந்தியாவிற்கு வெளியிலோ கடன் வாங்கலாம். (அதாவது கவர்னர்ஜெனால் அவர்களின் விசேஷப் பொறுப்புக்குட்பட்டு). மாகாண கவர்ன்மெண்டுகளும் அவ்விதமே கடன் வாங்கலாம். ஆனல் இரண்டு நிர்ப்பந்தங்களுக்குட்பட்டு. அதாவது இந்தியாவிற்கு வெளியே கடன் வாங்க உத்தேசித்தாலும், இந்திய சர்க்காரிடம் ஏற்கனவே வாங்கியிருந்த கடன் பூராச் செல்லாகாமல் பாக்கியாக நின்றாலும், மாகாண கவர்ன்மெண்டுகள் கடன் வாங்குவதற்கு ஐக்கிய சர்க்காரின் சம்மதம் வேண்டும்.

106. ஐக்கிய சர்க்காரின் கணக்குகளைப் பரிசீலனைசெய்ய ஒரு ஆடிட்டர் ஜெனரல்,மன்னர் அவர்களால் நியமிக்கப்படுவார். இந்தியா சம்பந்தமாக இங்கிலாந்தில் துகைகள் செலவிடப்படுவதற்கு வைக்கப்பட்டிருக்கும் கணக்குகளைப் பரிசீலனைசெய்வதற்கு கவர்னர் ஜெனரல் அவர்களால் ஒரு ஆடிட்டர் நியமிக்கப்படுவார். ஒவ்வொரு மாகாணத்திலும், அந்த மாகாண சட்டசபை அபிப்பிராயப்பட்டால், ஒரு மாகாண ஆடிட்டர் ஜெனரல் மன்னர் அவர்களால் நியமிக்கப்படலாம்.

107. நாம் ஏற்கனவே கூறியிருக்கிறபடி தற்காலம் இந்தியா செக்ரடெரிக்கு ஏற்படுத்தப்பட்டிருக்கும் மந்திராலோசனை சபை எடுபட்டுப்போய்விடும். அவருக்கு யோசனை சொல்வதற்காக மட்டும் மூன்றுக்குக் குறையாமல், ஆறுக்கு மேற்போகாமல் அட்வைசர்கள் நியமிக்கப்படுவார்கள். சர்விஸ் உத்தியோகஸ்தர்கள் சம்பந்தமான விஷயங்களைத்தவிற மற்ற விஷயங்களில், அட்வைசர்கள் சொல்லும் யோசனையை இந்தியா செக்ரடெரி நிராகரித்துவிடலாம்.

108. தற்காலம் கவர்ன்மெண்டாரின் பேரிலும், அல்லது கவர்ன்மெண்டார் போரும்,தாக்கல்செய்யப்படும் எல்லா வியாச்சியங்களும், இந்தியா செக்ரடெரி அவர்கள் பேரிலும்,போரும் தாக்கல் செய்யப்படுகின்றன. இனி இவைகள் ஐக்கிய சர்க்கார்,மாகாண சர்க்கார் இவர்களின்பேரிலும், அல்லது போரும், தாக்கல்செய்யப்படும்.

தற்காலம் இந்தியா செக்ரடேரியால், இந்தியாவுக்கு பாத்தியப்பட்ட சொத்துக்கள் சம்பந்தமாகச் செலுத்தப்படும் எல்லா அதிகாரங்களும் ஐக்கிய சர்க்காருக்கும், மாகாண சர்க்கார்களுக்கும், மாற்றப்படும்.

# அத்தியாயம். 19

## பர்மாவும் இந்தியாவும்.

109. பர்மா தற்காலம் இந்தியாவுடன்சேர்ந்திருக்கிறது. புதிய அரசியலில் பர்மா இந்தியாவை விட்டுப்பிரிக்கப்பட்டு, பர்மாவுக்கு இந்திய மாகாணங்களைப்போலவே பொறுப்பாட்சி கொடுக்கப்படும். தற்காலம் பர்மாவும் இந்தியாவும் ஒரே ராஜ்யத்தைச்சேர்ந்த மாகாணங்களாக யிருப்பதால் சாமான்கள் போக்குவரத்திலும், ஜனங்கள் போக்குவரத்திலும் யாதொரு விதமான நிர்ப்பந்தமும் கிடையாது. இந்தியாவைவிட்டு பர்மா பிரிந்தபின் இரண்டும் வெவ்வேறு தேசங்களாகி விடுவதால் இனி ஜனங்கள், சாமான்கள், இவைகளின் போக்குவரவு சம்பந்தமாக நிர்பந்தங்கள் இரண்டுதேசங்களிலும் ஏற்படுத்தலாம். ஏற்றுமதி, இறக்குமதி வரிகளை ஏற்படுத்தலாம். இந்தியர்கள் பர்மாவுக்குள்ளும் பர்மர்கள் இந்தியாவுக்குள்ளும் நுழையக்கூடாது, அல்லது சில நிர்ப்பந்தங்களுக்குட்பட்டுத்தான் நுழையலாம் என்று விதிகள் ஏற்படுத்தலாம். ஆனால் இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் உள்ள நீடித்த சம்பந்தத்தினால், இந்தியாவில் பிரிட்டிஷ்காரர்களுக்குச் சில உரிமைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது போல் இந்தியாவுக்கும் பர்மாவுக்கும் உள்ள நீடித்த சம்பந்தத்தினால் பர்மா சம்பந்தமாக இந்தியர்களுக்கும் இந்தியா சம்பந்தமாக பர்மர்களுக்கும், சில உரிமைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. பிரிட்டிஷ்காரர்களுக்கும், பர்மா சம்பந்தமாக இந்தியர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் உரிமைகளைவிட அதிக உரிமைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளை நாம் சுருக்கமாய்க்கூறுவோம்.

௧. பர்மாவில் ஸ்திரமாகக் குடியிருந்து வரும் பர்மா பிரிட்டிஷ் பிரஜைகளின்பேரில் இந்தியா கவர்ன்மெண்டார் யாதொரு பேதங்காட்டும் வரி (discriminatory taxation) விதிக்கக்கூடாது. இந்தியா

வில் ஸ்திரமாகக்குடியிருந்துவரும், இந்திய பிரிட்டிஷ் பிரஜைகளின் பேரில் பர்மா கவர்ன்மெண்டாரும் அவ்வித வரி விதிக்கக்கூடாது. பிரிட்டனில் ஸ்திரமாகக் குடியிருந்துவரும் பிரிட்டிஷ் பிரஜைகள் சம்பந்தமாக இந்தியாவும், பர்மாவும், அவ்வித வரி விதிக்கக்கூடாது.

b. இந்தியாவிலும், பர்மாவிலும், பிரிட்டிஷ்காரர்கள் நுழையக்கூடாது என்று சட்டங்கள் டிை இரண்டு தேசங்களும் ஏற்படுத்தக்கூடாது. ஆனால் பர்மர்களைப்பற்றி இந்தியாவிலும், இந்தியர்களைப் பற்றி பர்மாவிலும், அத்தகையை சட்டங்கள் ஏற்படுத்தலாம்.

இந்த நியமம் இந்தியாவில் மிகவும் ஆக்ஷேபிக்கப்பட்டது. இந்தியாவுக்கும், பர்மாவுக்கும், சென்ற 50 வருஷங்களுக்கு மேல்பட்ட நெருங்கிய சம்பந்தத்தாலும், இந்தியர்களுடைய பண உதவியைக் கொண்டும், இந்திய கூலியாட்களுடைய முயர்ச்சியாலும், பர்மா அபிவிருத்தியடைந்திருப்பதாலும், இந்தியாவில் பிரிட்டிஷ்காரர்களுக்கு என்ன உரிமைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனவோ அதே உரிமைகள் பர்மாவில் இந்தியர்களுக்கு ஏற்படுத்தவேண்டுமென்று இந்தியர்கள் வற்புறுத்தினர்கள். இது விஷயமாக கனம் செட்டிநாட்டு ராஜா அவர்களின் தலைமையில் இந்தியா செக்ரடெரிக்கு ஒரு தூதும் அனுப்பப்பட்டது. டிை யார்களின் முயற்சியினல் புதிய இந்தியா கவர்ன்மெண்ட் ஆக்டில் ஒரே ஒரு மாறுதலைத்தவிற வேறு மாறுதல்கள் செய்யாதபோதிலும், இந்தியர்கள் பர்மாவில் நுழையக்கூடாது என்று சட்டம் பர்மாவில் ஏற்படுத்தலாம் என்ற விஷயத்தின் எதார்த்தமான அர்த்தத்தை இந்தியா செக்ரடெரி அடியிற்கண்டபடி தெரிவித்தார். அதாவது இந்தியர்கள் பர்மாவிற்குள் நுழையக்கூடாது என்ற சட்டம், எல்லா இந்தியர்களைப் பொறுத்து ஏற்படுத்தப்படப்போவதில்லையென்றும், இந்தியக் கூலியாட்கள் கண்டபடி பர்மாவுக்குள் நுழைந்து கூலியைக்குறைத்து பர்மா கூலியாட்களை வேலையில்லாத் திண்டாட்டத்திற் குட்படுத்தாமலிருப்பதற்காகமட்டும், இந்திய கூலியாட்கள் சம்பந்தமாகமட்டும் ஏற்படுத்தப்படும் எனறும், மேலும் எல்லா இந்திய கூலியாட்கள் சம்பந்தமாகக்கூட டிை நிர்ப்பந்தம் ஏர்ப்படுத்தப்போவதில்லையென்றும், ஒரு தொழிலிலும் யாதொரு தேர்ச்சியும், அனுபவமும் பெருத வேலை

யாட்கள் (unskilled labour) சம்பந்தமாகமட்டும் ஷை சட்டம் ஏற்படுத்தத்தக்கதென்றும், ஜாதிசம்பந்தமான காரணத்தினுல் (racial grounds) இந்தியர்கள் பர்மாவுக்குள் நுழையக்கூடாது என்று ஒரு சட்டம் பர்மாசபை வெளியிட்டால் அதற்கு பர்மா கவர்னர் சம்மதிக்காமல் மன்னர் அவர்களின் அபிப்பிராயத்துக்கு நிறுத்தி வைக்கவேண்டுமென்றும் ஷை இரண்டு விஷயங்களும் பர்மா கவர்னருக்கு மன்னரிடமிருந்து கொடுக்கப்படும் ஆக்ஞாசாசனத்தில் வியக்தப்படுத்தப்படும் என்றும் தெரிவித்தார்.

c. பர்மாவில் விவசாயிகளுக்கு இந்திய நகரத்தார்கள், (நாட்டுக் கோட்டைசெட்டியார்கள்) பணம் கடன்கொடுத்து, அந்தத்தொகையை வசூலிக்க மார்க்கமில்லாமல், விவசாயிகளின் நிலங்களை ஏலத்திலெடுக்கும்படி நேர்ந்திருக்கிறது. இந்த நிலங்களை ஷை செட்டியார்கள் யாருக்கு வேண்டுமானுலும் பருதினம்செய்யலாம் என்றும் விவசாயிகளின் நிலம், விவசாயிகளுக்குத்தான் பருதீனப்படுத்த வேண்டும் என்ற சட்டம், விவசாயிகள் அல்லாதவர்கள் அனுபவத்திலிருக்கும் நிலங்களுக்குப் பிரயோகிக்கப்படமாட்டாது என்றும் ஆக்டிலேயே துலக்கப்பட்டிருக்கிறது.

d. இந்தியாவிலிருந்து பர்மாவிற்குள்ளும்,பர்மாவிலிருந்து இந்தியாவிற்குள்ளும்,இறக்குமதிகள் சம்பந்தமாகவும்,இந்தியாவிலிருக்கும் பர்மர்களைப்பொறுத்தும், பர்மாவிலிருக்கும் இந்தியர்களைப்பொறுத்தும், யாதொரு பேதங்காட்டும் நடவடிக்கைகளும் (discriminatory treatment) எடுத்துக்கொள்ளக்கூடாது. அதாவது மற்ற தேசங்களின் இறக்குமதிக்கு போடும் வரிக்கு வித்தியாசமாக வரி விதிக்கக்கூடாது. மற்ற தேசஜனங்களைப்போலல்லாமல் உரிமைகள், நிர்ப்பந்தங்கள் ஏற்படுத்தக்கூடாது. பர்மாவில் ரெஜிஸ்தராகியிருக்கும் கம்பெனிகள் இங்கிலாந்தில் ரிஜிஸ்தராகியிருக்கும் கம்பெனிகள் போலவே பாவிக்கப்படும்.

e. இந்தியாவில் டாக்டர்பரிக்ஷை பாஸ்செய்தவர்கள் பர்மாவில் டாக்டராகத்தொழில் நடத்தலாம். பர்மாவில் டாக்டர்பரிக்ஷை பாஸ் செய்தவர்கள் இந்தியாவில் தொழில் நடத்தலாம். ஆனுல் டாக்டர் பரிக்ஷைக்கு இன்னவிதமான தேர்ச்சி யிருக்கவேண்டும் என்று

இரண்டுதேசங்களும், பிரிவிகவுன்ஸிலின் அப்பீலுக்குள்பட்டு விதிகள் ஏற்படுத்திக்கொள்ளலாம்.

f. மற்ற தொழில்கள் சம்பந்தப்பட்டமட்டில் இரண்டு தேசங்களும் தங்களுக்கு யுக்தப்படி விதிகள் ஏற்படுத்திக்கொள்ளலாம். ஆனால் தற்காலம் உத்தியோகம், தொழில்முறை பார்ப்பவர்களை யாதொரு நிர்ப்பந்தத்துக்குட்படுத்தலாகாது.

110. பர்மா இந்தியாவைவிட்டுப் பிரிந்தவுடன், மற்ற தேசங்கள் சம்பந்தமாக ஏற்றுமதி, இறக்குமதி வரிகள் அமுலிலிருப்பது போல இந்தியா-பர்மா சாமான் போக்குவரத்து சம்பந்தமாக ஏற்றுமதி இறக்குமதி வரிகள் அமுலுக்குவரும். தற்காலம் இந்தியாவிலிருந்து பர்மாவுக்கும்,பர்மாவிலிருந்து இந்தியாவுக்கும், அனுப்பப்படுகிற சாமான்களுக்கு யாதொரு வரியுமில்லை. இந்தியாவின் மொத்த இறக்குமதியில் 100-க்கு 14 வீதம், பர்மாவிலிருந்து இந்தியாவுக்கு வருகிறது. இந்தியாவின் மொத்த ஏற்றுமதியில் 100-க்கு 5½ வீதம் பர்மாவுக்குப்போகிறது. ஆனால் பர்மாவின் மொத்த இறக்குமதியில் 100-க்கு 42 இந்தியாவிலிருந்து வருகிறது, பர்மாவின் மொத்த ஏற்றுமதியில் 100-க்கு 48 இந்தியாவுக்குப்போகிறது. திடீரென்று ஏற்றுமதி இறக்குமதி வரிகள் அமுலுக்குக்கொண்டு வரப்பட்டால் வியாபாரத்துக்குக்கெடுதி சம்பவிக்கக்கூடுமாதலால், புதிய அரசியல் திட்டம் ஆரம்பித்து மூன்று வருஷம்வரை அமுலிலிருக்குபபடியாக, இந்தியா-பர்மா வியாபார உறவைப்பற்றி ஒரு ஒப்பந்தம் இந்தியா கவர்ன்மெண்டாராலும், பர்மா கவர்ன்மெண்டாராலும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அது மன்னர் அவர்களின் உத்திரவு ரூபமாக வெளியிடப்படும். அதின் சாராம்சம் பின்வருமாறு:—

a. சில பொருள்களின் விலக்குக்குட்பட்டு இந்தியப் பொருள்கள் தீர்வையின்றி பர்மாவுக்குள் புகலாம். அவ்வாறே பர்மா பொருள்களும் இந்தியாவுக்குள் தீர்வையின்றி வரலாம்.

b. பிரிவினைக் காலத்தில் அமுலிலிருக்கும் பாதுகாப்புத் தீர்வைகள் பரஸ்பர இறக்குமதிப்பொருள்களின் மீது விதிக்கப்படும்.

c. பிரிவினைக்காலத்தில் அமுலிலிருக்கும் நிபந்தனைகளைத் தவிர்த்து இந்தியாவில் பர்மியர் புகுவதையும், பர்மாவில் இந்தியர் புகுவதையும், தடுத்து விதிகள் செய்யப்படமாட்டா.

d. சுகாதார, சாவதான, விசேஷப்பொறுப்புக் காரணங்களை முன்னிட்டு ஆட்கள் பிரவேசத்திற்கு நிபந்தனைகள் விதிக்க கவர்னர் ஜெனராலுக்கும், பர்மா கவர்னருக்கும் அதிகாரமுண்டு.

e. பர்மா பிரிவினைக்காலத்தில் அமுலிலிருப்பதைத் தவிர்த்து (வேறாகக் குறிப்பிட்டிருந்தாலன்றி) பர்மாவிலிருந்து இறக்குமதி செய்யப்படும் பொருள்களின் மீதோ, பர்மாவுக்கு ஏற்றுமதியாகும் பொருள்களின் மீதோ, புது சுங்கத்தீர்வைகளை விதிக்கக்கூடாது. பர்மாவும் பரஸ்பரம் இந்தச் சலுகையைக் காட்டும்.

அபின், உப்பு, உப்பில்போட்ட மீன், பாண்டுகளின்மீது கொண்டு வரப்படும் பொருள்கள், பிரிட்டிஷ்—இந்தியா, பர்மா ஆகியவற்றின் எல்லைக்குப் புறம்பான இடங்களிலிருந்து கொண்டு வரப்படும் பொருள்கள், ஆகிய விஷயத்தில் இவ்விதிகள் செல்லுபடியாகமாட்டா.

f. பரஸ்பரம் இரு தேசங்களும் ஒப்புக்கொண்டு, வெளிநாட்டிலிருந்துவரும் பொருள்களின் மீது தீர்வையைக் குறைத்துக் கொள்ளலாம். இக்காரியத்தை கவர்னர்ஜெனராலோ, பர்மா கவர்னரோ தங்கள் விசேஷாதிகாரத்தின்படி செய்வதாயிருந்தால், தேசங்களின் சம்மதம் தேவையில்லை. ஒரு நாட்டில் விளையாத பொருள்களின்மீது தீர்வையை மற்றைய நாடு இரண்டு மாத நோட்டீஸ் கொடுத்துக் குறைத்துவிடலாம்.

g. ஜப்பான்-இந்தியா ஜவுளி வியாபார ஒப்பந்தம் முடிந்தபின்னரும் ஜப்பானியப் பொருள்களின்மீது இந்தியா நிபந்தனைகளை ஏற்படுத்துவதாக விருந்தால் இந்தியா-பர்மா வியாபார ஒப்பந்தகாலத்தில் 1934—35-ம் வருஷத்திய அளவுக்குமேற்படாது பர்மா ஜப்பானியப்பொருள்களை வாங்கலாம்.

h. இந்தியாவிலிருந்து தீர்வையின்றி பர்மாவுக்கு ஏற்றுமதி

செய்யப்பட்ட தேயிலை, பருத்தி, அரக்கு முதலியவை மறுபடி எற்றுமதி செய்யப்பட்டாலும், இந்தியாவிலிருந்து இவ்வாறு திரும்ப எற்றுமதி செய்யப்பட்டாலும், அவற்றின்மீது தீர்வை விதிக்கப்படும்.

111. இந்தியாவுக்கும் பர்மாவுக்கும் பொருளாதாரவிஷயமான எற்பாடு:—

தற்காலம் பர்மா இந்தியாவின் ஓர் மாகாணமாகக் கருதப் படுகிறது. இனிமேல் ஐக்கிய அரசாட்சி ஆரம்பிப்பதற்குமுன் பர்மா இந்தியாவைவிட்டுப் பிரிந்துபோகும். தற்காலம் இந்தியாவின் ஆஸ்தியிலும், கடன் தொகையிலும், பர்மாவுக்குறிய பங்கைப் பிரித்து, பர்மாவின் பங்கு ஆஸ்தியை பர்மாவிடம் ஒப்புவித்து, பர்மாவுக்குறிய கடன்தொகையை பர்மா கவர்ன்மெண்டார் செலுத்த வேண்டுமென்று எற்பாடு செய்யவேண்டும்.

ஆஸ்திசம்பந்தப்பட்டமட்டில், புதிய ஆக்டிலேயே ஒரு வித விவஸ்தை செய்யப்பட்டிருக்கிறது. அதாவது தற்காலம் பர்மாவிலும் பர்மா கவர்ன்மெண்டாருடைய ஆளுகையிலும் இருக்கும் சொத்துக்களும், கட்டடங்களும், பர்மாவுக்குச்சேர்ந்தவை என்றும், மற்றவை எல்லாம் இந்தியாவுக்குச்சேர்ந்தவை என்றும், இரண்டு செக்ஷன்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் கடன் தொகைகளையும் பிரிக்கவேண்டியிருப்பதால், அது சம்பந்தமாக பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் ஒரு கமிட்டி எற்படுத்தினார்கள். அந்தக் கமிட்டியின் தீர்மானப்படி மொத்த ஆஸ்திகளிலும், கடன்களிலும், பர்மாவுக்கு 100/-க்கு $7\frac{1}{2}$ வீதம் பங்கென்று அடியிற்கண்டபடி தீர்மானிக்கப்பட்டிருக்கிறது:—

| | | |
|---|---|---|
| மொத்தக்கடன்தொகை | 1361,00,16,000 | ரூ |
| மொத்த ஆஸ்தி | 1126,27,26,000 | ரூ |
| ஆஸ்திக்குமேல் கடன் | 234,72,90,000 | ரூ |
| இதில் பர்மாவின்பங்கு 100 க்கு $7\frac{1}{2}$ வீதம் | 17,60,47,000 | ரூ |
| பர்மாவில் உள்ள ஆஸ்திகளின் மதிப்பு | 35,55,29,000 | ரூ |

ஆக மொத்தம் பர்மா இந்தியா வுக்குக் கொடுக்கவேண்டியது } 53,15,76,000 ரூ

இந்தத்துகையை $3\frac{1}{2}$% வட்டியுடன் 45 வருஷத்துக்குள் பர்மா இந்தியாவிற்குக்கொடுக்கவேண்டும். அப்படி வருஷாவருஷம் கொடுக்கவேண்டியதுகை வட்டியுடன் ரூ 2,35,46,000/- (சுமார் $2\frac{1}{3}$ கோடிரூபாய்). இந்தக்கணக்கு பர்மாவுக்கு அனுகூலமாகவும், இந்தியாவுக்கு பிரதிகூலமாகவும் இருக்கிறது என்று நமது ராஜீய வாதிகளின் அபிப்பிராயம் இந்தியாவின் ஆஸ்தியைவிடக் கடன்கள் அதிகமாகயிருப்பதில், ஷை கடன் துகைகளில் பர்மாவின்பங்கு 100 க்கு $7\frac{1}{2}$விதம் என்று கணக்கிட்டிருப்பது சரியல்லவென்றும், பர்மா சம்பந்தமாக ஏராளமான துகைகள் இதுவரையில் செலவிடப்பட்டிருக்கிறதென்றும், பர்மாவின் நியாயமான பங்கு 100க்கு 10 க்குக் குறையாமல் கணக்கிடவேண்டுமென்றும் அபிப்பிராயப்படுகிறார்கள். மேலும், தற்காலத்தில் பர்மாவின் எல்லைப்புறதேசத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை இந்திய ராணுவம் நிர்வகித்து வருகிறது. பர்மாவுக்குத் தனியாக ஒரு ராணுவம் எற்படுத்தாத வரை மேற்படிப் பொறுப்பு இந்திய ராணுவத்துக்கு இருந்து வருகிறதினால் பர்மா இந்தியாவுக்கு இந்திய ராணுவச்செலவில் ஒரு பாகம் செலுத்தவேண்டும். சைமன் கமிஷன் மெம்பர்கள் ஷை வகைக்கு பர்மா இந்தியாவுக்கு வருஷம் ஒன்றுக்கு, இரண்டு அல்லது மூன்றுகோடிரூபாய் கொடுக்கவேண்டுமென்று அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். இதுவிஷயமாக யாதொரு எற்பாடும் நாளதுவரை செய்யப்படவில்லை.

# அத்தியாயம் 20.

## கலம்பகம்

112. புதிய அரசியல் திட்டத்தில் கவர்னர்ஜெனரல், கவர்னர் இவர்களுடைய விசேஷ அதிகாரங்களுக்குட்பட்டு, மந்திரிகளிடம் பொறுப்பாட்சி அளிக்கப்பட்டிருக்கிறது என்று நாம் இதுவரை கூறியுள்ளோம். புதிய அரசியல் சரிவர நடைபெறவேண்டுமானால், சட்டசபைகளில் மெஜாரிட்டிக் கட்சியைச்சேர்ந்தவர்கள் மந்திரிப் பதவியை ஒப்புக்கொண்டு புதிய அரசியலை நடத்தவேண்டும். அப்படியில்லாமல் முன் 1926-ம் வருஷத்தில் சில சட்ட சபைகளில் நடந்த

மாதிரி மெஜாரிட்டிக்கக்ஷித்தலைவர்கள், மந்திரிவேலையை ஒப்புக் கொள்ளாமல், புதிய அரசியல் நடப்பதைத் தடைசெய்வார்களானால், புதிய அரசியல் திட்டத்தில் மந்திரிகளுக்குக்கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரங்களைப்பூராவாகவோ, அல்லது சில பாகத்தையோ, ஐக்கிய சர்க்கார் நிர்வாகசம்பந்தமாக கவர்னர் ஜெனரலும், மாகாண சர்க்கார் நிர்வாக சம்பந்தமாக கவர்னரும், தங்களிடம் மாற்றிக்கொள்ளலாம். அப்படிச்செய்யுமுன் ஒரு பிரகடனம் வெளியிடவேண்டும். அதை உடனே இந்தியா செக்ரடெரிக்குத் தெரிவிக்கவேண்டும். கவர்னர் அவ்விதம் பிரகடனம் செய்வதானால் கவர்னர் ஜெனரலுடைய சம்மதத்தையும் பெறவேண்டும்.

இந்தப் பிரகடனத்தைப்பார்லிமெண்ட் சபையார் ஒரு வருஷத்துக்கொருதரம் ஆமோதிக்கவேண்டும். மூன்று வருஷத்திற்கு மேல் இந்தப் பிரகடனம் ஊர்ஜிதத்திலிருக்காது. அதற்குள்ளாக அரசியல் திட்டத்தையே மாற்றவேண்டியதாக ஏற்படும்.

113. புதிய அரசியல் திட்டத்தில் மாகாணங்களுக்குப்பொறுப்பாட்சி அளிப்பதும், பொறுப்பாட்சியுள்ள ஐக்கிய சர்க்காரை ஸ்தாபிப்பதும் இரண்டு முக்கியமான அம்சங்கள் என்று நாம் ஏற்கனவே கூறியிருக்கிறோம். பொறுப்புள்ள ஐக்கிய சர்க்கார் ஏற்படுத்துவதற்குப்புதிய அரசியல் திட்டப்படி ஐக்கிய சட்டசபை ஏற்படுத்தவேண்டும். அதில் ஜனப் பிரதிநிதி சபை (அஸெம்பிளி) மாகாண ஜனப் பிரதிநிதி சபைகளால் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்றும் ஏற்கனவே நாம் தெரிவித்திருக்கிறோம். ஆகையால், இந்திய மாகாணங்களுக்குப் பொறுப்பாட்சி யளித்துக்கொஞ்சகாலத்துக்குப் பிறகுதான் ஐக்கிய சட்டசபையும், ஐக்கிய சர்க்காரும் ஏற்படுத்தப்படும். இந்த மத்தியகாலத்திலும், புதிய அரசியல் திட்டப்படி ஐக்கிய சர்க்காருக்கு என்ன அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றனவோ அவைகளைத்தான் தற்கால இந்திய சர்க்கார் செலுத்தவேண்டும்.

114. சமஷ்டி சர்க்காருக்குச் சட்டசம்பந்தமாக யோசனை சொல்லவும், பொதுவாக சட்ட சம்பந்தமான வேலைகளை நிர்வகிக்கவும் ஒரு சமஷ்டி அட்வகேட்ஜெனரல், கவர்னர்ஜெனரல் அவர்

களால் நியமிக்கப்படுவார். ஒவ்வொரு மாகாணத்துக்கும் ஒரு மாகாண அட்வகேட்ஜெனரல் அந்தந்த கவர்னர் அவர்களால் நியமிக்கப்படுவார்.

115. இந்தியாவின் அக்கரைகளை இங்கிலாந்தில் பாதுகாத்துக் கொள்வதற்காகவும், இந்திய கவர்மெண்டாருக்கு ஏஜண்டாகவும், ஹை கமிஷனர் என்ற ஒரு அதிகாரி கவர்னர்ஜெனரல் அவர்களால் நியமிக்கப்படுவார்.

116. ஆக்டில் அநேகம் விஷயங்களைப்பற்றி விவரங்கள் துலக்கப்படவில்லை. உதாரணமாக தேர்தல்கள் சம்பந்தமாகத் தொகுதிகளும், தேர்தல் செய்யும் முறையும் நிர்ணயிக்கப்படவில்லை. ஐக்கிய சர்க்காரின் வரும்படியிலிருந்து சில மாகாணங்களுக்குத் தொகைகள் கொடுக்கவேண்டுமென்று ஆக்டில் சொல்லப்பட்டிருப்பதில், இவ்வளவு என்று குறிப்பிடவில்லை. இவைபோன்ற விஷயங்கள் மன்னர் அவர்கள் உத்திரவு ரூபமாக நிர்ணயிக்கப்படும். அதாவது இந்தியா செக்ரடெரி இந்த விஷயங்களைத்தீர்மானித்து, இந்தத் தீர்மானங்களைப்பார்லிமெண்ட் சபைக்குத்தெரிவித்து பார்லிமெண்ட் ஆமோதித்தபின், இவைகளை மன்னர் அவர்களின் மந்திராலோசனை சபையின் பெயரால் வெளியிடுவார். அநேகம் விஷயங்கள் சம்பந்தமாக கவர்னர்ஜெனரல் அவர்களுக்கும், கவர்னர் அவர்களுக்கும் விதிகள் ஏற்படுத்த அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

## அத்தியாயம் 21.

### இந்திய சமஸ்தானங்கள்.

117. புதிய சமஷ்டி அல்லது ஐக்கிய அரசியலில் இந்திய மாகாணங்களும் இந்திய சமஸ்தானங்களும் சேர்ந்து சட்டதிட்டங்கள் ஏற்படுத்தி நிர்வாகம் நடத்தவேண்டியிருப்பதால், இந்திய சமஸ்தானங்களின் அமைப்பும், நிர்வாகமும் தற்காலம் எப்படி நடத்தப்பட்டு வருகின்றன என்றும், சமஸ்தானங்களுக்குத் தற்காலம் என்னென்ன அதிகாரங்கள் இருக்கின்றன என்றும் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். ஆகையால் அந்த விஷயங்களை நாம் சுருக்கமாக ஆராய்வோம்.

தற்காலம் இந்தியாவில் சுமார் 600 சமஸ்தானங்களுக்கு மேலிருக்கின்றன. பட்லர் கமிட்டி என்ற கமிட்டியார் மொத்தம் 562 சமஸ்தானங்களைக் கணக்கெடுத்து அவைகளை மூன்று வகுப்பாகப் பிரித்தார்கள். (a) 109 பெரிய சமஸ்தானங்கள் தனித்தனியே நரேந்திரமண்டலத்திற்கு (Chamber of Princes) பிரதிநிதிகள் நியமிக்கும் பாத்தியமுள்ளவர்கள் (b) 126 சிறிய சமஸ்தானங்கள் தங்கள் எல்லோருக்குமாக நரேந்திரமண்டலத்திற்கு 12 பிரதிநிதிகள் நியமிக்கும் பாத்தியமுள்ளவர்கள் (c) நரேந்திரமண்டலத்தில் பிரதிநிதித்துவத்துக்கு பாத்தியமில்லாத 327 சில்லரை சமஸ்தானங்களும் ஜாகீர்களும்.

இந்த சமஸ்தானங்கள் ஒன்றுக்கொன்று விஸ்தீர்ணத்திலும், ஜனத்தொகையிலும், வரும்படியிலும், அபிவிருத்தியிலும் வித்தியாசமுள்ளவை. காஷ்மீர் சமஸ்தானம் 85000 சதுரமைல் விஸ்தீர்ணம் உள்ளது. ஹைதராபாத்து சமஸ்தானம் 82700 சதுரமைல் உள்ளது. இவை ஒவ்வொன்றும் வங்காள மாகாணத்தைப்போல் விஸ்திர்ணமுள்ளது. பம்பாய் ராஜதானியில் உள்ள சில சமஸ்தானங்கள் சொல்ப ஏக்கர் விஸ்தீர்ணமுள்ளதாக யிருக்கின்றன. சில சமஸ்தானங்களில் ஜனங்களின் பிரதிநிதித்துவமுள்ள சட்டசபைகள் இருக்கின்றன. ஆனால் அந்த சபைகளின் தீர்மானங்களை சமஸ்தானாதிபதி ஒப்புக்கொள்ள வேண்டியதில்லை. மற்றவைகளில் சட்டசபைகளே கிடையாது. சில சமஸ்தானங்களில், பிரிட்டிஷ் மாகாணங்களிலிருப்பதுபோல் ஹைகோர்ட்டுகளும், அதற்குக் கீழ்ப்பட்ட கோர்ட்டுகளும் இருக்கின்றன, மற்றவைகளில் அத்தகைய ஹைகோர்ட்டுகள் கிடையாது. பொதுவாக எல்லா சமஸ்தானங்களின் உள்நாட்டுத்துரைத்தனத்தின் நிர்வாகம் அந்தந்த சமஸ்தானத்தைப்பொறுத்தது. உள்நாட்டு வியவகாரங்களில் சாதாரணமாக பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாருக்குத் தலையிட அதிகாரமில்லை. அந்தந்த சமஸ்தானங்கள் தங்கள் சமஸ்தானப் பிரஜைகளுக்குச் சட்டதிட்டங்கள் ஏற்படுத்தி, வரிகள் வசூலித்துக்கொள்ள பாத்தியமுண்டு. துறைமுகங்களையுடைய சமஸ்தானங்கள் அந்தத் துறைமுகங்களில் ஏற்றுமதி இறக்குமதியாகும் சாமான்களைப்

பொறுத்துச் சுங்கவரி விதிக்க பாத்தியமுண்டு. சில சமஸ்தானங்கள் (முக்கியமாக பரோடாவும் கச்சும்) இந்த வரியை நேரில் வசூலிக்கின்றன. மற்றவைகளில் (முக்கியமாக திருவாங்கூரில்) இந்த வரி பிரிட்டிஷ் இந்தியா கவர்ன்மெண்டாரால் வசூலிக்கப்பட்டு அதில் ஒரு பாகம் ஷை சமஸ்தானத்துக்குச்செலுத்தப்பட்டு வருகிறது.

ஹைதராபாத், திருவாங்கூர், மைசூர், பரோடா முதலிய பெரிய சமஸ்தானங்களில் பட்டாளங்களும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இவைகளைச் சரியானபடி பயிர்ச்சி செய்வதற்காக இந்தியா கவர்ன்மெண்டார்கள் மிலிடெரி அட்வைசர்கள் என்ற ராணுவ ஆபீஸர்களை நியமித்திருக்கிறார்கள்.

எல்லா சமஸ்தானங்களிலுமுள்ள தந்தி ஆபீஸ்கள் இந்தியா கவர்ன்மெண்டாரின் ஆளுகையிலிருக்கின்றன. எல்லா சமஸ்தானங்களிலும் இந்தியா கவர்ன்மெண்டின் ஆளுகைக்குட்பட்ட தபாலாபீஸ்கள் இருக்கின்றன. ஆனால் இவைகளில் 15 சமஸ்தானங்களில் சமஸ்தானாதிபதிக்குட்பட்ட தனித் தபாலாபீஸ்கள் இருக்கின்றன. இவைகளில் திருவாங்கூர் சமஸ்தானம் ஒன்று.

ஆதியில் எல்லா சமஸ்தானங்களும் தனித் தனியாக வெள்ளி நாணயங்களும், பித்தளைநாணயங்களும் அடித்துக்கொண்டிருந்தன. நாளடைவில் இது நின்றுபோய்விட்டது. இப்பொழுது 8 சமஸ்தானங்களில்தான் ரூபாய் நாணயங்கள் அடிக்கப்படுகின்றன. மற்றவைகளில் பித்தளை நாணயங்கள்மட்டும் அடிக்கப்படுகின்றன. ஹைதராபாத்து சமஸ்தானத்தில்மட்டும் ஷை சமஸ்தானத்தாரால் அச்சிடப்பட்ட காகித நாணயங்கள் அதாவது கர்ரென்ஸிநோட்டுகள் செலாவணியாகிக்கொண்டிருக்கின்றன.

பெரிய சமஸ்தானங்கள் சிலவற்றில் இந்திய ராணுவப்படை ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. ஷை ராணுவ அதிகாரிகளின் நிர்வாகத்துக்குட்பட்ட இடத்துக்குக் கன்டோன்மெண்ட் என்றுபெயர். ஷை கன்டோன்மெண்ட் இடங்களும், ரெயில்வே பாதைகள் போடப்பட்டிருக்கும் இடங்களும், முக்கிய சமஸ்தானங்களில் பிரிட்டிஷ்

பிரதிநிதி (Resident) வசிக்கும் இடமும், பிரிட்டிஷ்-இந்தியப்பிரதேச மாகவே கருதப்படும். அந்தப் பிரதேசங்களில் பிரிட்டிஷ் இந்தியா சட்டதிட்டங்கள் அமுலிலிருக்குமேயொழிய சமஸ்தானத்தின் சட்டதிட்டங்கள் அமுலிலில்லை. உதாரணமாக தற்காலம் பெங்களூர் சிடி, மைசூர் சமஸ்தானத்தைச்சேர்ந்தது. பெங்களூர் கன்டோன் மெண்ட் பிரிட்டிஷ் இந்தியா கவர்ன்மெண்டாரைச்சேர்ந்தது. புதிய சமஷ்டி அரசியலில் பெங்களூர் கன்டோன்மெண்டை மைசூர் சமஸ் தானத்தின் ஆளுகைக்குள்படுத்தி விடவேண்டுமென்று பிரிட்டிஷ் சர்க்கார் தீர்மானித்திருக்கிறார்கள். இதை ஷை கன்டோன்மெண்டி லுள்ள ஜனங்கள் ஆக்ஷேபிக்கிறார்கள்.

ஒவ்வொரு முக்கிய சமஸ்தானத்திலும் ரெசிடெண்ட் என்ற பிரிட்டிஷ் பிரதிநிதி இந்தியசர்க்காரால் நியமிக்கப்பட்டிருக்கிறார். ரெசி டெண்ட் இல்லாத சமஸ்தானங்களைத்தொகுதியாக(group)ச்சேர்த்து ஒவ்வொரு தொகுதிக்கும் கவர்னர்ஜெனரல் அவர்களின் ஏஜண்ட் என்ற பெயருடன் ஒரு பிரதிநிதி நியமிக்கப்பட்டிருக்கிறார். உதாரண மாக ஹைதராபாத்துக்கும் மைசூருக்கும் தனித்தனியாக ஒரு ரெசி டெண்ட் இருக்கிறார். மதராஸ் ராஜதானியிலுள்ள மற்ற சமஸ் தானங்களாகிய திருவாங்கூர், கொச்சி, புதுக்கோட்டை, பங்கன பள்ளி, சாந்தூர் இவைகளை மதராஸ் சமஸ்தானங்கள் என்ற பெய ருடன் ஒரு தொகுதியாகச்சேர்த்து, இவைகள் எல்லாவற்றிற்கும் பொதுவாக ஒரு ஏஜண்ட் நியமிக்கப்பட்டு, அவர் சாதாரணமாக திருவனந்தபுரத்தில் குடியிருந்துவருகிறார்.

சென்னப்பட்டணத்தில் சிலதினங்களில் ஏராளமாக வெடி குண்டுகள் கோட்டையிலிருந்து போடப்படுவதை ஜனங்கள் கேட் டிருப்பார்கள். இதிலிருந்து சில முக்கியமான அதிகாரிகள் விஜயம் செய்திருக்கிறார்கள் அல்லது புறப்பட்டுப்போகிறார்கள் என்று நாம் அறிகிறோம். இவ்விதம் குண்டுகள் விடுவது அந்தந்த உத் தியோகஸ்தர்களின் அந்தஸ்தைக்குறிக்கும். நமது சக்கிரவர்த்தி அவர்கள் விஜயம்செய்யும் போது 101 குண்டுகளும், கவர்னர்ஜென ரல் அவர்கள் விஜயம்செய்யும்போது 31 குண்டுகளும், கவர்னர்கள் விஜயம்செய்யும்போது 21 குண்டுகளும், மற்ற அதிகாரிகளுக்குத்

தக்கபடி பிரத்தியேகமாய்க் குறிப்பிடப்பட்டிருக்கும் குண்டுகளும் போடப்படும். இதேமாதிரி ஒவ்வொரு சமஸ்தானாதிபதிக்கும் இவ்வளவு குண்டுகள் என்று விதிக்கப்பட்டிருக்கிறது. இதில் உயர்ந்த வகுப்பு சமஸ்தானாதிபதிகளுக்கு 21 குண்டுகள். இதிலிருந்து படிப் படியாகக் குறைக்கப்பட்டு, அடியில் இருக்கும் சில சமஸ்தானாதிபதிகளுக்கு யாதொரு குண்டுகளும் சுடப்படுவதில்லை. 11 குண்டுக்கு மேல்பட்ட சமஸ்தானாதிபதிகள் மட்டும் தங்கள்பேருக்கு முன் (His Highness)ஹிஸ்ஹைநெஸ் என்ற பதத்தைச்சேர்த்துக்கொள்ளலாம். உதாரணமாக பங்கனபள்ளி, சாந்தூர் இந்த இரண்டு சமஸ்தானாதிபதிகளுக்கு யாதொரு குண்டுகள் மரியாதைகளில்லை. ஹிஸ்ஹைநெஸ் என்ற பதத்தை அவர்கள் உபயோகப்படுத்தக் கூடாது.

அநேகம் சமஸ்தானங்கள் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாருக்குக் கப்பம் கட்டுகின்றன. வடஇந்தியாவில் சில சில்லரை சமஸ்தானங்கள் பெரிய சமஸ்தானங்களுக்குக் கப்பம் கட்டுகின்றன. புதிய சமஷ்டி அரசியலில் இந்தக் கப்பங்கள் எல்லாம் ரத்துச்செய்யப்படும்.

சில சமஸ்தானங்களுக்குச் சில உரிமைகள் உண்டு. அவை யாவன:—

a. சுங்கவரிகளும், உப்புவரிகளும், தாங்களே விதித்துக் கொண்டு, பிரிட்டிஷ் இந்தியா கவர்ன்மெண்டாருக்கு யாதொரு வரியும் செலுத்தாத சமஸ்தானங்கள்.

b. சில சமஸ்தானங்களின் கடிதப்போக்குவரத்துகள் செலவில்லாமல் பிரிட்டிஷ் தபாலாபீசுகள்மூலம் நடந்து வருகின்றன. சில சமஸ்தானங்களுக்கு இலவசமாகத்தபால் ஸ்டாம்புகள் இந்தியா கவர்ன்மெண்டாரால் சப்ளைசெய்யப்படுகின்றன.

இந்திய சமஸ்தானங்களுக்கும் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாருக்கும் உள்ள சம்பந்தம்:—

a. வெளிநாட்டு விஷயங்கள்.

வெளிநாட்டு விஷயங்கள் சம்பந்தமாக இந்திய சமஸ்தானங்

களுக்கு யாதொரு சுவாதந்திரமுமில்லை. பிரிட்டிஷ் சர்க்கார் மூலம் தான் அவைகள் வெளிநாடுகளுடன் எல்லா வியவகாரங்களையும் நடத்திக்கொள்ளவேண்டும். வெளிநாட்டு விஷயங்கள் சம்பந்த மாக இந்திய சமஸ்தானங்களுக்கும், பிரிட்டிஷ் இந்திய மாகாணங் களுக்கும் யாதொரு வித்தியாசமுமில்லை.

b. சமஸ்தானங்களுக்குள் பரஸ்பர சம்பந்தம்.

சில வருஷங்களுக்குமுன் வரை எல்லா சமஸ்தானங்களும் தங்களுக்குள் ஏற்படும் எல்லா வியவகாரங்களையும்,பிரிட்டிஷ் சர்க்கார் அவர்களின் மூலம் நடத்திக் கொள்ள வேண்டியிருந்தது. ஏதாவது தகவல் கொடுக்கவேண்டுமென்றாலும்கூட பிரிட்டிஷ் கவர்ன்மெண் டார் மூலம் அதாவது இந்தியா கவர்ன்மெண்டின் ராஜீய இலாகா (political department) மூலமாகத்தெரியப்படுத்த வேண்டும். கொஞ்சவருஷங்களாக சமஸ்தானுதிபதிகள் நேருக்குநேராகக்கடிதப் போக்கு வரத்து வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனால் பிரிட்டிஷ் சர்க்காரின் சம்மதமில்லாமல் சமஸ்தானங்கள் தங்களுக்குள் ஏற்பட்டிருக்கும் விவாதங்களைத் தீர்த்துக்கொள்ள வோ,அல்லது சொத்தை விற்கவோ, பரிவர்த்தனை செய்யவோ, அல்லது கொடுத்துவிடவோ அதிகாரமில்லை.

c. சமஸ்தானங்களின்மேல் அன்னிய தேசங்கள் படையெடுக் காமல் பாதுகாக்கும் பொறுப்பு பிரிட்டிஷ் சர்க்காரைச் சேர்ந்தது. சமஸ்தானங்களில் குழப்பம், கலகம் வாராமல் தடுக்கவேண்டியதும் பிரிட்டிஷ் சர்க்காரின் பொறுப்பே.

d. சமஸ்தானங்களின் உள்நாட்டு வியவகாரங்களில் தலையிட சாதாரணமாக பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாருக்கு பாத்தியமில்லை. ஆனால் அடியிற்கண்ட விஷயங்களில் பிரிட்டிஷ் சர்க்காருக்குத் தலையிட பாத்தியமிருக்கிறது.

i. ஒரு சமஸ்தானுதிபதி இறந்துபோகும் பக்ஷத்தில் அவரு டைய நேர்வாரிசுகள் மேற்படி பட்டத்தை அடைவதற்கு ஸ்பெஷல் அதிகாரம் தேவையில்லை. (1917-ம் வருஷம் வரை பிரிட்டிஷ்சர்க் காரின் ஸ்பெஷல் உத்திரவு தேவையாகயிருந்தது). வாரிசுவிஷய

மாகத்தகராறுகள் ஏற்பட்டால் அவைகளை பிரிட்டிஷ் சர்க்கார் தீர்க்க வேண்டும்.

ii. சுவீகாரம் செய்துகொள்வதற்கு பிரிட்டிஷ் சர்க்காரின் சம்மதம் அவசியம்.

iii. ஒரு சமஸ்தானாதிபதி மைனராகயிருக்கும்பக்ஷத்தில் அவருக்குக் கல்வி புகட்டி, அவர் மேஜராகும் வரை சமஸ்தானத்தை நிர்வகிக்கும் பொறுப்பு பிரிட்டிஷ் சர்க்காரைச்சேர்ந்தது.

iv. ஒரு சமஸ்தானாதிபதி கொடுங்கோல் ஆட்சி செலுத்தி வந்தாலும்,ராஜத்துரோகம் அல்லது பெறுத்த குற்றம் செய்தாலும், ஜனங்களுக்குச் சித்திரவதை முதலிய அநாகரிகமானதும், கொடுமையானதுமான தண்டனை விதித்தாலும், அந்த சமஸ்தானாதிபதியை நீக்கவோ, அல்லது அவருடைய அதிகாரத்தைக்குறைக்கவோ, அல்லது அவருடைய நிர்வாகத்தை மேல் பார்வை பார்க்க ஒரு அதிகாரியை நியமிக்கவோ, பிரிட்டிஷ் சர்க்காருக்கு பாத்தியமுண்டு.

v. சமஸ்தானாதிபதிகளுக்கும் சமஸ்தானப் பிரஜைகளுக்கும் பிரிட்டிஷ் சர்க்கார் பட்டங்கள் அளிக்கலாம். பிரிட்டிஷ் சர்க்கார் எந்த பட்டங்கள் அளிக்கிறார்களோ (அதாவது ராவ் சாகிப், ராவ் பகதூர், சர், முதலியன) அதே பட்டங்களை சமஸ்தானாதிபதிகள் தங்கள் பிரஜைகளுக்கு அளிக்க பாத்தியமில்லை.

நரேந்திரமண்டலம்.

1920ம் வருஷத்திற்குமுன் சமஸ்தானங்கள் எல்லாம் சேர்ந்து கூடி தங்களுக்குள் பொதுவாகவுள்ள விஷயங்களைப்பற்றிக் கலந்து கொள்ள முடியாமலிருந்துவந்தன. அத்தகைய விஷயங்களைப் பற்றியும், சமஸ்தானங்களுக்கும் பிரிட்டிஷ் இந்தியாவுக்கும் பொதுவான விஷயங்களைப்பற்றியும், ஆலோசனைசெய்வதற்கு ஒரு சபை ஏற்படுத்தவேண்டுமென்று மான்டேகு செம்ஸ்போர்ட் ரிப்போர்ட்டில் சிபார்சுசெய்யப்பட்டது. இதை அனுசரித்து 8—2—21 தேதியில் நரேந்திரமண்டலம் (Chamber of Princes) என்ற சபை ஒன்று ஏற்படுத்தப்பட்டது.

இதில் அடியிற்கண்ட சமஸ்தானங்கள் மெம்பர்கள்.

a. 11 குண்டுகள் அல்லது அதற்குமேல்பட்ட குண்டுகள் மரியாதைகளுடைய எல்லா சமஸ்தானங்களும் தனித்தனி மெம்பர்கள். இப்படிப்பட்ட சமஸ்தானாதிபதிகள் தற்காலம் 109 பேர்கள்.

b. ஷை தனித்து மெம்பர்ஸ்தானத்துக்கு பாத்தியமில்லாத சமஸ்தானங்களில் 126 சமஸ்தானங்கள் தங்களுக்குள்ளிருந்து 12 பிரதிநிதிகளை இந்தச்சபைக்குத்தேர்ந்தெடுக்கிறார்கள்.

இந்த சபைக்கு வைசிராய் அவர்கள் அக்கிராசனம் வகிக்கிறார்கள். இந்த சபை செய்யும் தீர்மானங்கள் எந்த சமஸ்தானத்தையும் சட்டப்படிக்கட்டுப்படுத்தாது. சமஸ்தானங்கள் தாங்களாகவே இந்த சபையில் மெம்பர்களாகச்சேரவேண்டுமேயொழிய, சமஸ்தானாதிபதிகளை மெம்பர்களாக ஆகும்படி பலவந்தப்படுத்தமுடியாது.

ஆதியிலிருந்தே ஹைதராபாத், மைசூர், பரோடா இந்த மூன்று சமஸ்தானங்களும் மெம்பராகச்சேரவில்லை. காஷ்மீரும் திருவாங்கூரும் பின்னாடி மெம்பர்ஸ்தானத்திலிருந்து விலகிவிட்டன. இன்னும் சில சமஸ்தானங்கள் மெம்பர் ஸ்தானத்தை விட்டு விலகப் போவதாகச் சொல்லிக்கொண்டிருக்கின்றன.

சமஷ்டி அரசியலில் பிரிட்டிஷ் இந்தியாவுக்கும் சமஸ்தானங்களுக்கும் பொதுவாகவுள்ள விஷயங்கள் சமஷ்டி சர்க்காரைப் பொறுத்த விஷயங்களாக ஏற்பட்டுவிடுகிறபடியால், இந்தியாவில் சமஷ்டி அரசாட்சி ஏற்படுத்தப்பட்டபின் நரேந்திர மண்டலம் என்ற சபை இருக்கவேண்டிய அவசியமே இராது.



# இரண்டாம் பாகம்.

## அனுபந்தங்கள்.

i. சமஷ்டி அல்லது ஐக்கிய சட்டசபை தேர்தல்களும், ஓட்டர்கள், அபேக்ஷகர்கள், இவர்களின் யோக்கியதாம்சமும்.
ii. சென்னை சட்டசபை தேர்தல்களும், ஓட்டர்கள், அபேக்ஷகர்கள், இவர்களின் யோக்கியதாம்சமும்.
iii. தேர்தல்செய்யும் முறைகள்.
iv. கவர்னர்ஜெனரல் அவர்களுக்கும், கவர்னர் அவர்களுக்கும் மன்னர் அவர்கள் கொடுக்கும் ஆக்ஞாசாசனத்தின் உள்ளுரை.
v. இந்தியாவின் விஸ்தீர்ணம், வரும்படி, ஜனசங்கியை.
vi. இந்தியாவிலும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்குள்ள சில நாடுகளிலும் ராணுவமும் ராணுவச்சிலவும்.
vii. இந்தியாவுக்கும் குடியரசுநாடுகளுக்கும் உள்ள தாரதம்மியம்.
viii. இந்தியாவும் அன்னியநாடுகளும்:-சில தாரதம்மியங்கள்.
ix. இங்கிலாந்தில் ஜனங்களுக்கு ஓட்டுரிமை கிடைத்த வரலாறு.
x. இந்தியாவிலும், சென்னை ராஜதானியிலும், சில சமஸ்தானங்களிலும், கல்வி அபிவிருத்தி.
xi. இந்தியா சம்பந்தமான சில புள்ளி விவரங்கள்:—
a. இந்தியா கவர்ன்மெண்டின் வரவு செலவு திட்டம்.
b. இந்தியா வரவு சிலவு மொத்தத்தொகையில் ஒவ்வொரு ஐட்டத்தின் ஈவு விகிதம்.
c. இந்திய ராணுவ விவரம் (கப்பற்படை, ஆகாயப்படை உள்பட).
xii. சென்னை ராஜதானி சம்பந்தமான சில புள்ளி விவரங்கள்:-
a. ஜனத்தொகை.
b. வேலை செய்பவர்கள், வேலை செய்யாதவர்கள்.
c. கிராமங்கள், டவுன்கள்.
d. கல்வி அபிவிருத்தி, மத வாரியாக.
e. ஷை ஜில்லா வாரியாக.
f. ஷை சில இந்து வகுப்பினர் வாரியாக.
g. சென்னை ராஜதானி வரவு சிலவு திட்டம்.
xiii. சென்னை சட்டசபை தேர்தலுக்கு ஓட்டர்கள் ஜாப்தா தயாரிப்பதற்கு ஏற்படுத்தப்பட்ட விதிகள்.
xiv. தேர்தல் நடத்தும் விதத்தைக்குறித்த விதிகள்.
xv. தேர்தல் சம்பந்தமான குற்றங்களைக் குறித்த விதிகள்.

இரண்டாம்பாகம் கூடிய சீக்கிரம் வெளியிடப்படும்.

